Regd. M No. 7897 Phone No. 76190, 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 1—9—74 ஞாயிறு வெளியூர் 2—9—74 திங்கள்



## அ. தி. மு. க.—வ. கம்யூ. உறவு முறிவு:

# 'சமரச முயற்சி கிடையாது'



## புதுவை தேர்தலில் கூட்டணி இல்லை; எம். ஜி. ஆர். திட்டவட்ட அறிவிப்பு

சென்னை, செப். 1—பயங்கர நேரடி மோதலுக்குப்பின், நேற்று முன்தினம் நள்ளிரவு அ. தி. மு. க. தலைவர் எம். ஜி. ஆரும், வ. கம்யூனிஸ்டு தலைவர் கல்யாணசுந்தரமும் சந்தித்துப் பேசினார்கள் அல்லவா?

"இந்தச் சந்திப்பின்போது எந்தவித சமரச முயற்சியும் நடைபெறவில்லை" என்று எம்.ஜி.ஆர். திட்டவட்டமாக அறிவித்துவிட்டார்.

எனவே, அ.தி.மு.க. வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கிடையே ஏற்பட்டுள்ள மோதல் வலுவடைந்த நிலையிலிருந்து எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை என்பதை எம். ஜி. ஆர் நேற்று வெளியிட்ட அறிவிப்பில் உறுதிப்படுத்தியிருக்கிறார்.

அ.தி.மு.க. தலைவர் எம். ஜி.ஆரும் வ. கம்யூ தலைவர் கல்யாணசுந்தரமும் நேற்று முன்தினம நடைபெற்ற கலைவாணர் விழா நிகழ்ச்சியில், ஒருவருக்கொருவர் கட்டிப் புரண்டு அடித்துக்கொள்ளாத குறையாக, ஒருவரை ஒருவர் பகிரங்கமாக நேருக்கு நேர் தாக்கிக் கொண்டது தெரிந்தத்.

அ. தி. மு. க. வ. கம்யூ. பிளவு முற்றியுள்ள கட்டத்தில், நீண்ட இடைவெளிக்குப் பின் இருகட்சிகளின் தலைவர்களும் ஒருவரையொருவர் சந்திக்கும் அந்த நிகழ்ச்சியில் இருவருக்கும் உள்ள பிளவு குறைந்து உறவு வலுப்படும் என்று இரு கட்சிகளின் சார்பிலும் எதிர்பார்க்கப்பட்டது.

### பெருத்த வேதனை

ஆனால் நிலைமை முற்றிலும் மாறுபட்டதாகப் போய்விட்டது. இந்த அளவு இருதலைவர்களும் பகிரங்கமாக மோதி கலைவாணர் நிகழ்ச்சியையே அசிங்கப்படுத்திவிட்டது இரு கட்சிப் பிரமுகர்களுக்கும் பெருத்த வேதனையைக் கொடுத்தது.

இரு தலைவர்களின் நேரடிச் சந்திப்பு, உறவை வளர்ப்பதற்குப் பதிலாக, அடிப்படை நட்புறவையே குலைக்கும் விதத்தில் அமைந்துவிட்டதை உணர்ந்த இரு கட்சிப் பிரமுகர்களும், உடனடியாகஇரு தலைவர்களும சந்தித்துப் பேச வேண்டும என்று விருமபினர்.

இந்த யோசனைக்கு வேண்டா வெறுப்பாக எம். ஜி. ஆர். ஒத்துக்கொண்டார். கல்யாணசுந்தரமும் "போனால் போகிறது" என்ற போக்கில் அந்தச் சந்திப்புக்கு ஒத்துக்கொண்டார்.

அதன்படி இருவரும் நேற்று முன்தினம்நள்ளிரவு 15நிமிட நேரம் சந்தித்துப்பேசினார்கள்.

### பேச்சுவார்த்தை தோல்வி

சந்திப்பின்போது இருதலைவர்களும் ஒருவரையொருவர் முகம் தூககிப் பார்க்கவில்லை என்று கூறப்படுகிறது. கடைசியில் பேச்சுவார்த்தை தோல்வி அடைந்தது என்ற இரு கட்சியின் சார்பிலும் மறைமுகமாக தெரிவிக்கப்பட்டது.

### எம். ஜி. ஆர். அறிவிப்பு

சந்திப்புக்குட்பின்நிருபர்களிடம எம. ஜி. ஆர். அறிவித்த செய்தி வருமாறு:

எங்கள் பேச்சுவார்த்தையில் எந்த வித சமரச முயற்சியுமஏற்படவில்லை பல பிரச்னைகளில் இரு கட்சிகளிடையே உடன்பாடு எதுவும ஏற்படவில்லை. நிறைய வேறுபாடு இருக்கிறது. சில விஷயங்களில்தான் ஒற்றுமை உண்டு.

தமிழ்நாட்டைப்பொறுத்த மட்டிலும தூவக்கத்தில் தோழமைக் கட்சிகளாகச் செயல்பட்ட போது இருந்த நிலை தான் நீடிக்கமுடியும.

இவ்வாறு எம. ஜி. ஆர். தெரிவித்தார்.

ஆளுங்கட்சிக்கு எதிராகச் செயல்படும்சில பிரச்னைகளில் அ. தி. மு. க. வும் வலது கம்யூனிஸ்டும் இணைந்து நிற்கலாம். தவிர இரு கட்சிகளுக்கும் இடையே கூட்டணி என்ற பேச்சுக்கே இடமில்லை. என்பதை எம். ஜி ஆர். திட்டவட்டமாக அறிவித்துவிட்ட தாகவே கருதத் தோன்றுகிறது.

### வ. கம்யூ.வுடன் கூட்டு இல்லை?

'தமிழ்நாட்டில் மட்டும் முன்பிருந்தமாதிரி தோழமைக் கட்சிகளாகச் செயல்படுவோம்' என்று எம. ஜி. ஆர். அறிவித்திருப்பது, வருகிறடிசம்பர் மாதம்நடைபெற விருக்கும் புதுவைத் தேர்தலில் அ தி மு க.—வ. கம்யூ. கூட்டு இல்லை என்பதை உறுதிப்படுத்துவதாக அமைந்திருக்கிறது.

எம் ஜி.ஆரின் இந்த அறிவிப்பு வ கம்யூ. வட்டாரத்தில் பெரும அவமானத்தையும் அதிர்ச்சியையும் ஏற்படுத்தியுள்ளது.

---

## எல்லா அரசாங்க ஊழியருக்கும ஒரு மாத போனஸ்

கோலாலம்பூர், செப். 1—எல்லா அரசாங்க ஊழியர்களுக்கும் ஆண்டுக்கு 1 மாத சம்பளத்தை போனசாக அளிக்க மலேசிய அரசு முடிவு செய்திருக்கிறது.

மலேசிய துணைப் பிரதமர் ததுக் உசேன் ஓன் இந்தத் தகவலை நேற்று அறிவித்தார்.

இந்த ஆண்டு ஜனவரி முதல் இது அமுலுக்குவரும் என்றும் அவர் அறிவித்தார்.

---

குடந்தையில்

## இசை வேளாளர் மாநாடு ஆரம்பம்: எம்ஜிஆருக்கு கண்டனம்

கும்பகோணம், செப். 1—எம். ஜி. ஆரின் தாசிகுலப் பேச்சுக்கு குடந்தையில் நடைபெறும் இசை வேளாளர் மாநாட்டில் கண்டனம் தெரிவிக்கப் பட்டது.

தமிழ்நாடு இசைவேளாளர் சங்க மாநாடு குடந்தையில் இன்று காலை துவங்கியது.

மாநாடு கூடுவதற்கு முன் மாபெரும் ஊர்வலம் ஒன்று நடைபெற்றது. 500 பெண்கள் உட்பட சுமார் 5 ஆயிரம் பேர் இதில் கலந்து கொண்டனர்.

மகாமகக் குளக்கரையில் உள்ள அண்ணா சிலைக்கு மாலை யணிவித்து ஊர்வலத்தை திருவெண்காடு பி. சுப்பிரமணிய பிள்ளை துவக்கிவைத்தார்.

நாதசுவர இசை முழுங்க ஊர்வலத்தின் முன்னே யானை மீது ஒருவர் கொடி பிடித்து வந்தார்.

மாநாட்டுக்கு மதுரை எல் கிருஷ்ணசாமி பாரதி தலைமை வகித்தார்,

வழுவூர் ராமையா பிள்ளை மாநாட்டை துவக்கிவைத்தார்,

மதுரை என். பி. எம். சேதுராமன் கொடியேற்றி வைத்தார்.

குளிக்கரை பிச்சையப்பா அனைவரையும் வரவேற்றார்.

நடிகர் சாரங்கபாணி உட்பட இசை வேளாளர் தலைவர்கள் பலர் மாநாட்டில் கலந்து கொண்டனர்.

மாநாட்டுக்குத் தலைமை வகித்த கிருஷ்ணசாமிபாரதி, கருணாநிதியின் ஆட்சியைக் காப்பாற்ற வேண்டியது நமது கடமையாகும் என்று பேசினார். நெல் விலை ஏற்றதற்கு தி. மு. க. அரசு காரணமல்ல என்றும், மத்திய அரசின் கொள்கையே காரணம் என்றும் விளக்கினார்.

மக்களுக்குப் பல நன்மைகளைச் செய்து வரும தி.மு.க. ஆட்சி நீடிக்க வேண்டும் என்று அவர் கேட்டுக்கொண்டார்.

என்.பி.எம. சேதுராமன் கொடியேற்றி வைத்துப் பேசுகையில், கூறியதாவது:—

குடந்தை தேரடி தெரு, 3-வது சந்தில் வாழ்ந்துவந்த எம். ஜி. ஆரின் தாயார் யார்? பிறப்பு வளர்ப்புஎன்ன? ஆனால், 4½ கோடி மக்களின் தலைவரை, அண்ணாவின் தம்பி கருணாநிதியை இழிவுபடுத்திப் பேசிய செயலை சுட்டிக்காட்டாமல் இருக்க முடியாது என்று பேசினார்.

வழவூர் ராமையா பிள்ளை பேசுகையில், தாசிகுலப் பேச்சுக்கு இதுவரை எம். ஜி. ஆர். மன்னிப்பு கேட்கவில்லை என்றார்

அவர் மன்னிப்பு கேட்டிருக்கலாம்; அப்படிக் கேட்டிருந்தால் அவருக்குப் பெருமையாக இருந்திருக்கும் என்றும் ராமையா கூறினார்.

---

## பல்கலைக்கழக கருத்தரங்கம்

மதுரை, செப். 1— இருபதாம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய ஆசிரியர்கள் நூல்களை மதிப்பிடும் கருத்தரங்க வரிசையை மதுரை பல்கலைக்கழக தமிழ்த்துறை ஏற்பாடு செய்கிறது. ஆண்டுதோறும இந்தக் கருத்தரங்கு நடைபெறும இந்த ஆண்டு அகிலனின் நூல்கள் ஆராந்து மதிப்பிடப்படும.

வருகிற செப்படமபர் 9,10, 11, 12 ஆகிய நாட்களில் மதுரை பல்கலைக்கழகக் கட்டிடத்தில் கருத்தரங்கு நடக்கிறது.

காலை 10 மணிக்கு 9-ம் தேதி கருத்தரங்கை துணைவேந்தர் டாக்டர் மு. வரதராசனார் தலைமை வகித்து துவக்கி வைக்கிறார்.

பிரபல எழுத்தாளர்கள் பலர் கருத்தரங்கில் கலந்து கொள்கின்றனர்.

---

மாமிச உணவு கோரிக்கை

## மாணவர் போராட்டம் வாபஸ்

சென்னை, செப். 1— புரசைவாக்கத்தில் உள்ள ஒரு மாணவர் விடுதியில், மாமிச உணவு கேட்டும், வேறு பல கோரிக்கைகளுக்காகவும் மாணவர்கள் உண்ணாவிரதம் இருப்பதாக நேற்று செய்தி வெளியாகி இருந்ததல்லவா?

செய்தியறிந்ததும், அரிஜன நலத்துறை அமைச்சர் ராஜாங்கம் அந்த விடுதிக்குச் சென்று மாணவர்களைச் சந்தித்துப் பேசினார்.

தங்களுக்கு மேஜை நாற்காலி தேவை என்றும் அசைவ உணவு தேவை என்றும் மாணவர்கள் தங்களது கோரிக்கையை தெரிவித்தனர்.

இதுகுறித்து ஆவன செய்வதாக அமைச்சர் உறுதியளித்ததை ஏற்றுக்கொண்டு மாணவர்கள் தங்களது போராட்டத்தை நிறுத்திக்கொண்டனர்.

---

## மந்திரிசபை மாறுதல்: கருணாநிதி புன்முறுவல்

கோவை, செப். 1—தமிழ்நாடு அமைச்சரவையில் சமீபத்தில் மாற்றம் இருக்குமா என்று முதலமைச்சர் கருணாநிதியிடம் நிருபர்கள் கேட்டனர்.

இந்தக் கேள்விக்கு முதலமைச்சர் பதில் கூறாமல் புன்முறுவல் பூத்தார்.

கோவை மாவட்டத்தில் உள்ள ஆப்பக்கூடலில் நிருபர்களுக்கு அவர் பேட்டி அளித்தார்.



### கறுப்புக்கொடி ஆர்ப்பாட்டம்

பவானியில் முதலமைச்சர் கருணாநிதியை எதிர்த்து கறுப்புக்கொடி ஆர்ப்பாட்டம் நடந்தது. இது சம்பந்தமாக கம்யூனிஸ்டு ஊழியர்கள் 20 பேர்களும் அண்ணா தி. மு. கழக ஊழியர்கள் 7 பேர்களும் கைது செய்யப்பட்டனர்.

கறுப்புக்கொடி காட்டப் போவதாக அறிவித்திருந்த வேறு 6 கம்யூனிஸ்டுகளும் பவானியில் கைது செய்யப் பட்டனர்.

---

அதிக விலைக்கு மின்சாரம் தருகிறோம்

## யூனிட்டுக்கு 10 காசு தரத் தயாரா? தமிழகத்துக்கு கேரளம் புது நிபந்தனை

திருவனந்தபுரம், செப். 1—இனிமேல் தமிழ் நாட்டுக்கு மின்சாரம் சப்ளை செய்ய வேண்டுமானால், யூனிட்டுக்கு 10 காசு விலை தர வேண்டும் என்று இப்போது கேரளம் வற்புறுத்தி வருகிறது.

கேரளத்திடம் தனது தேவைக்குமேல் ஏராளமான மின்சாரம் உள்ளது. கேரளத்தில் உள்ள நீர் நிலைகள் எல்லாம் நிரம்பி வழிகின்றன. ஆயினும், இந்த விலைச் சிக்கல் காரணமாக தமிழ்நாட்டுக்கு மின் சப்ளையை கேரளம் நிறுத்திவிட்டது.

கடந்த ஆண்டு ஜூன்முதல் இந்த ஆண்டு மேமாதம்வரை கேரளம் தமிழ்நாட்டுக்கு 30 கோடி 30 லட்சம் யூனிட் மின்சாரத்தை சப்ளை செய்தது. இதற்கு முதல் 10 கோடி யூனிட்டுக்கு, யூனிட்ஒன்றுக்கு 7.8 காசு வீதமும், மீதி மின்சாரத்துக்கு யூனிட்டுக்கு 8 காசு வீதமும் விலை நிர்ணயிக்கப்பட்டு வந்தது.

மே மாதத்துக்குப் பிறகு தமிழ்நாட்டுக்கு மின்சாரம் சப்ளைசெய்ய முடியாது என்று கேரளம் கூறியது.

இப்போது எவ்வளவு மின்சாரம் தேவையானாலும் கேரளத்தால் சப்ளைசெய்ய முடியும். ஆனால் இதற்கு யூனிட்டுக்கு 10 காசு விலை தரவேண்டும் என்று கேரளம் கோருகிறது. மின்சார உற்பத்திச் செலவு கூடிவிட்டது என்று கேரளம் காரணம் காட்டுகிறது.

தமிழ் நாட்டைப் பொறுத்தவரை முதல் 2 கோடி யூனிட்டுக்கு யூனிட் ஒன்றுக்கு 8காசுவீதமும், மீதி மின்சாரத்துக்கு யூனிட்டுக்கு 8.2 காசு வீதமும் விலை தர தயாராக உள்ளது.

நெய்வேலி மின்சாரத்துக்கு யூனிட் 8.48 காசுதான் செலவாகிறது என்று தமிழ்நாடு வாதிடுகிறது.

இதை கேரள அதிகாரிகள் ஏற்கவில்லை. நெய்வேலி மின்சாரத்துக்கு 29 காசும், நிலக்கரியைப் பயன்படுத்தி எண்ணூரில் தயாரிக்கப்படும் மின்சாரத்துக்கு 18 காசும் செலவாகிறது என்றும அவர்கள் கூறுகின்றனர்.

கேரளாவில் நல்ல மழை பெய்ததன் விளைவாக நீர்நிலைகள் எல்லாம் நிரம்பி வழிகின்றன. இன்னும் இரண்டு மாதங்களுக்கு அங்கு மழை இருக்கும். ஆகையால் எவ்வளவு மின்சாரத்தை வேண்டுமென்றாலும் தமிழ்நாட்டுக்கு சப்ளை செய்ய கேரளத்தால் இயலும். இதற்கு விலைப்பிரச்சினை தடங்கலாக இருந்து வருகிறது.

இந்தச்சிக்கலைத் தீர்க்க, கேரள, தமிழக மின்சார வாரிய அதிகாரிகள் அடுத்த வாரம் கூடிப்பேச முடிவு செய்துள்ளனர்.

---

## புதுவையில் விவசாய பாலிடெக்னிக்

பாண்டிச்சேரி, செப். 1— பாண்டிச்சேரியில் விவசாய பாலிடெக்னிக் ஒன்று திறக்கப்படும். இத் தகவலை பாண்டிச்சேரி அரசாங்க உயர் அதிகாரி ஆர். பத்ரிநாத் தெரிவித்தார்.

---

## புதுவை தேர்தல்: தேதி அறிவிப்பு

புதுவை, செப். 1—புதுவை மாநிலத் தேர்தல் வருகிற டிசம்பர் மாதத்தில் நடைபெற இருக்கிறது என்று நம்பகமாகத் தெரிகிறது.

டிசம்பர் மாத முதல் ஞாயிற்றுக்கிழமையன்று புதுவைத் தேர்தலுக்கான வாக்குப்பதிவு நடைபெறக் கூடும்.

அடுத்த ஆண்டுதான் நடக்கும் என்று எதிர்பார்க்கப் பட்ட புதுவைத் தேர்தல், இந்த ஆண்டே நடக்கும் என்ற சூழ்நிலை உருவாகிவிட்டது.

இந்த ஆண்டு இறுதிக்குள் தேர்தலை நடத்திவிட முடிவு செய்யப்பட்டிருப்பதாக நம்பகமாகத் தெரிகிறது.

இதற்கான அதிகாரப்பூர்வ அறிவிப்பு இன்னும் ஓரிரு தினங்களில் வெளியாகும்.

### அ. தி. மு. க.- இந்திரா காங்கிரஸ் கூட்டணி

கடந்ததேர்தலில் கூட்டணியாக போட்டியிட்ட அதிமுக- வ. கம்யூனிஸ்டு கட்சிகளுக்கிடையே இந்தத் தேர்தலில் கூட்டுக் கிடையாது என்று தெரியவருகிறது.

அநேகமாக புதுவையில் அ. தி. மு. க.வும் இந்திரா காங்கிரசும் முதல் கட்டமாகத் தேர்தல் உடன்பாடு செய்து கொள்ளும் என்றும் தெரியவருகிறது.

---

## இடைக்கால நிவாரணம்: தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் கோரிக்கை

சென்னை, செப். 1—தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் மன்றத்தின் மாநிலத் தலைவர் தா. பால்செயராசு, பொதுச் செயலாளர் க. மீனாட்சிசுந்தரன், பொருளாளர் தே. வில்லியம், வட ஆற்காடு மாவட்டத் தலைவர் சி. முனுசாமி, கோவை கல்வி மாவட்டச் செயலாளர் ம. கிருட்டிணசாமி ஆகியோர் அகவிலைப்படிக் குழுவின் செயலாளரைச் சந்தித்து ஆசிரியர் மன்றத்தின் கருத்துக்களை விண்ணப்பமாகத் தந்தனர்.

அதில் தெரிவிக்கப்பட்டுள்ள கோரிக்கைகள் வருமாறு:

மத்திய அரசுஆசிரியர்கட்கு வழங்கப்படும ஊதியம், அகவிலைப்படிஆகியவற்றைதமிழக ஆசிரியர்கட்கும்வழங்கவேண்டும். தேர்வு நிலைஊதியத்தை மாற்றி உயர்த்தி அமைக்க வேண்டும். இளநிலை ஆசிரியர்களை முதுநிலை ஆசிரியர்களாக உடன் மாற்றவேண்டும். ஓய்வூதியத்தை உயர்த்த வேண்டும, கிராமப் புற ஆசிரியர்கட்கும் வீட்டு வாடகைப்படி வழங்க வேண்டும், நகர ஈட்டுப்படி, பயணப்படி, விடுப்பு வசதிகள் ஆகியவைகளை அரசு ஊழியர்கட்கு வழங்குவது போல வழங்க வேண்டும். ஆசிரியர்களுக்குகல்விவளர்ச்சி அலுவலர்களாகவும, மத்திய உணவுக்கூட மேற்பார்வையாளர்களாகவும் பதவி உயர்வு அளிக்க வேண்டும்.

இவ்வாறு விண்ணப்பத்தில் கோரப்பட்டிருந்தது.



சென்னை தேனாம்பேட்டையில் முத்து தீப்பெட்டித் தொழிற்சாலையை கல்வியமைச்சர் நெடுஞ்செழியன் தலைமையில், டாக்டர் விசாலாட்சி நெடுஞ்செழியன் துவக்கிவைத்தார்.

### படித்த இளைஞர்கள்

# புதிய தொழில் துவங்க வாய்ப்பு: அமைச்சர் நெடுஞ்செழியன் தகவல்

**சென்னை, செப். 1—படித்த இளைஞர்கள், வேலை தேடுவதிலேயே காலத்தை வீணாக்கிக் கொண்டிராமல், அரசு வழங்கும் சலுகைகளைப் பயன்படுத்திக்கொண்டு சிறு தொழில்களைத் துவங்க முன்வர வேண்டும் என்று கல்வியமைச்சர் நெடுஞ்செழியன் வற்புறுத்தினார்.**

சென்னை தேனாம்பேட்டையில் முத்து தீப்பெட்டித் தொழிற்சாலை துவக்க விழாவில் அமைச்சர் நெடுஞ்செழியன் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:—

படித்த இளைஞர்கள் பலர் வேலை இல்லை சும்மா இருக்கிறேன் என்று கூறிக் கொண்டே காலத்தை வீணாக்குகிறார்கள். வேலையையே நம்பிக் கொண்டிருக்காமல், சிறு சிறு தொழில்களைத் துவங்க வேண்டும். சிறு தொழில் துவங்க அரசு உதவியும் கிடைக்கும்.

சுமார் 700-க்கு மேற்பட்ட தொழில்களுக்கு அரசு உதவி கிடைக்கும் என்ற தகவலை, அரசு புத்தகமாகவே அச்சிட்டு வெளியிட்டுள்ளது. அந்தப் புத்தகத்தை யாரும் வாங்கிப் படித்து, இந்த வாய்ப்பை பயன்படுத்திக் கொண்டதாகத் தெரியவில்லை.

தமிழ்நாட்டில் தி. மு. க. அரசு ஏற்படுவதற்கு முன் 11000 சிறுதொழில்கள்தான் இருந்தன. இந்த அரசு பொறுப்பேற்ற பின், கடந்த 7 ஆண்டு காலத்தில் அது 35 ஆயிரம் தொழில்களாக பெருகியுள்ளது.

தமிழ்நாட்டில் இன்னும் தொழில்கள் பெருக வாய்ப்பு உள்ளது. நாலரை கோடி தமிழ் மக்கள் உள்ளனர். இந்தக் கணக்கை வைத்துப் பார்த்தால் 3½ லட்சம சிறு தொழில்களாவது பெருக வேண்டும். தி.மு.க. ஆட்சி கொடுத்த ஊக்கத்தால் இப்போது ஓரளவு தொழில்கள் வளர்ந்து வருகின்றன.

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ரூ. 10 ஆயிரம்வரை வட்டியில்லாமல், 20 ஆண்டுதவணையில் திருப்பிப் பெறும்வகையில் அரசு கடன் கொடுக்கிறது. அதையும் பயன்படுத்திக் கொள்ள யாரும் முன் வருவதில்லை.

நம்முடைய நாட்டில் நாணயம் இல்லாத காரணத்தால் தான் எந்தத் தொழிலும் வளரவில்லை. நாணயம் இருந்தால் எந்தத் தொழிலும் சிறப்பாக வளரும். தீப்பெட்டி மக்கள் வாழ்க்கையில் அன்றாடம் பயன்படும் பொருள் இதற்கு நல்ல எதிர் காலம் இருக்கிறது.

இந்தியாவில்மட்டும் அல்லாது ஆசியாவிலேயே தமிழ் நாட்டில சிவகாசியில்தான் தீப்பெட்டித் தொழில் சிறப்பாக வளர்ந்துள்ளது.

வடநாட்டுக்கும், வெளிநாடுகளுக்கும்கூட சிவகாசியிலிருந்துதான் தீப்பெட்டியும், பட்டாசுகளும் ஏற்றுமதியாகின்றன. இந்த தொழில் குடிசைத் தொழிலாக வளர வாய்ப்புள்ளது. இதன்மூலம் பல குடும்பங்கள் பிழைக்க முடியும், எனவே இந்தத் தொழிற்சாலை பல்கிப் பெருகி வளர வாழ்த்துகிறேன்.

இவ்வாறு அமைச்சர் நெடுஞ்செழியன் கூறினார்.

விழாத்துவக்கத்தில் மா. செங்குட்டுவன் அனைவரையும் வரவேற்றார். டாக்டர் விசாலாட்சி நெடுஞ்செழியன் குத்துவிளக்கு ஏற்றிவைத்தார். அமைச்சர் நெடுஞ்செழியன் பெயர்ப்பலகையை திறந்துவைத்தார். அலமேலு அப்பாதுரை, நீலகண்டன, வெள்ளை ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். தொழிற்சாலை உரிமையாளர் கவிஞர் ஏ.எஸ்.முத்துசாமி வரவேற்பு மடல் வாசித்தளித்தார். அழகேசன் நன்றி கூறினார்.

7-ம் பத்தித் தொடர்ச்சி

(அழுகை வெடிக்க வார்த்தையின்றி தலையை மட்டும் ஆட்டினார்.)

சென்னை ரகசிய போலீசார் விசாரித்த பிறகுதான் அவர் இறந்துவிட்டதாக தெரிந்தது. அதன்பின் அவருக்கு இறுதிச் சடங்குகள் செய்யப்பட்டது.

மேற்கண்டவாறு சுகதா பீவி கூறினார். அவரை முதலாவது எதிரி வைத்தியின் வக்கீல் குறுக்கு விசாரணை செய்தார்.

வக்கீல்: 'உங்கள் கணவர் என்ன தொழில் செய்தார் என்று தெரியுமா?

சாட்சி; தெரியாது.

வக்கீல்: என்ன வியாபாரம் எவ்வளவு லாபம் என்ற விஷயங்களையும் உங்களிடம் சொல்வதில்லையா?

சாட்சி: இல்லை.

வக்கீல்; (இறந்துபோன புகைப்படத்தில்) முகமே தெரியவில்லை. எப்படி உங்கள் கணவர் என்று கூறுகிறீர்கள்?

சாட்சி:(அழுதுகொண்டே) என் கணவர் தான். தயவு செய்து இது மாதிரி கேள்வி கேட்காதீர்கள் என்று கூறினார்.

வழக்கு விசாரணை தொடர்ந்து நாளை திங்கட்கிழமை (2-ந் தேதி) நடைபெறும்.

### நீர் மட்டம்

சென்னை, ஆக. 23—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 68·80 அடி | |
| | மீட்டர் | |
| பெரியாறு | 6·01 | ௸ |
| வைகை | 10·24 | ௸ |
| பாபநாசம் | 20·38 | ௸ |
| கிருஷ்ணகிரி | 10·25 | ௸ |

# பாட்டரியைக் கொண்டு பஸ் ஓட்ட ஆராய்ச்சி: ராமச்சந்திரன் தகவல்

**சென்னை, செப். 1—டீசலுக்குப் பதில் பாட்டரியைப் பொருத்தி பஸ்களை ஓட்ட ஆராய்ச்சி நடைபெறுகிறது.**

இந்தத் தகவலை தமிழக போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன்தெரிவித்தார்.

தொழில் வளர்ச்சியால் காற்றில் நச்சுப் பொருள்கள் கலந்து சுற்றுச் சூழ்நிலை கெடுவதைத் தடுப்பது எப்படி என்பது பற்றிய கருத்தரங்கம் சென்னையில் நடைபெற்றது. அதில் அமைச்சர் ராமச்சந்திரன் கலந்துகொண்டார். அப்போது அவர் கூறியதாவது:—

"தொழிற்சாலைகள் பெருகி அவற்றில் இருந்து வெளியாகும் கழிவுப் பொருள்களினால் காற்று மண்டலமும், மற்ற சுற்றுப்புறங்களும் கெடுகின்றன.

நகரங்களில் டீசல் எண்ணெயினால் ஓடும் பஸ்களில் இருந்து வெளியாகும புகைதான், காற்று மண்டலம் கெடுவதற்கு முக்கிய காரணம்.

இப்படி காற்று கெடுவதை தடுப்பதற்கு நகரங்களில் பஸ்களை 'பாட்டரி'யில் ஓட்டலாம்.

இதற்காக இப்போது பரிசோதனை நடந்து வருகிறது. அது வெற்றி பெற்றால். சென்னையில் 'பல்லவன் போக்குவரத்து கழக'த்தைச் சேர்ந்த பஸ்களையும் 'பாட்டரி'யில் ஓட்டலாம்.

இவ்வாறு அமைச்சர் ராமச்சந்திரன் கூறினார்.

# சினிமா காட்சி வரி: எம். ஜி. ஆரை எதிர்த்து சம்பத் போர்க்கொடி

**சென்னை, செப். 1—சினிமா காட்சி வரி சம்பந்தப்பட்ட பிரச்னையில் அ.தி.மு.க. தலைவர் எம்.ஜி.ஆருக்கு எதிராக ஈ. வி. கே. சம்பத் போர்க்கொடி துவக்கியிருக்கிறார்.**

சினிமா காட்சி வரியை ரூ150ஆக தமிழக அரசு உயர்த்தியதும், அப்படி உயர்த்தியது தவறு என்று அ தி மு க தலைவர் எம். ஜி. ஆர், நடிகர் சிவாஜி கணேசன் ஆகியோர் கூட்டறிக்கை விட்டதும், வரி உயர்வை எதிர்த்து எம். ஜி. ஆர்., சிவாஜி இருவரும் இணைந்து போராட தயார் என்று அறிவித்ததும் தெரிந்ததே.

அதன் பின் சினிமா அதிபர்கள், முதல்வர் கருணாநிதியை சந்தித்துப் பேசிய பிறகு, அந்த வரி விதிப்பில் மாறுதல் செய்யப்பட்டது.

ரூபாய் 150 என்ற வரி ரூ. 2, என்ற அளவுக்குக் குறைக்கப்பட்டது.

இந்த வரிக்குறைப்புக்கு ஈ. வி. கே. சம்பத் கடும எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறார்.

தமிழ்நாட்டில் தோன்றிய பல்வேறு கட்சகளிலும் கொஞ்ச நாள் இருந்துவிட்டு கடைசியாக தமிழ்நாடு இந்திரா காங்கிரசின் கொள்கைப் பரப்புச் செயலாளர் என்ற பதவியை வைத்துக் கொண்டு அ.தி.மு.க. மேடைகளிலேயே பேசிக் கொண்டிருப்பவர் சம்பத் என்பது குறிப்பிடத்தக்கது,

இந்திரா காங்கிரஸ்-அ. தி. மு. க. இணைப்புக்கு ரகசியமாக, சம்பத் வேலைசெய்து வருவதாகக் கூறப்படுவதும் தெரிந்ததே.

அந்த அளவுக்கு எம்.ஜி.ஆர் கட்சியின் 'ரசிகர்' என்று மற்றவர்களால் கருதப்படும் சம்பத், எம்.ஜி.ஆரின் கொள்கைக்கு எதிராகப் போர்க் கொடி துவக்கியிருப்பது அ தி மு க வட்டாரத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

இது குறித்து சென்னை மூலக்கொத்தளத்தில் நடைபெற்ற அ.தி.மு.க. பொதுக் கூட்டத்தில் சம்பத் பேசும் போது கூறியதாவது:—

### சினிமாவை தேசியமயமாக்குவதா?

15 தினங்களுக்கு முன்னர் சினிமா தியேட்டர்களுக்கு காட்சி ஒன்றுக்கு 150 ரூபாய் வரி என்று கருணாநிதி அறிவித்தார். இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் முறையில் சினிமா தியேட்டர் அதிபர்கள் கொட்டகைகளை மூடினார்கள். சினிமா தியேட்டர்களை தேசியமயமாக்கப் போவதாக கருணாநிதிமிரட்டிபார்த்தார். ஆனால்அதே சமயத்தில் தமது ஏவலர்களை அனுப்பி பேச்சு வார்த்தையும் நடத்தினர்.

### சினிமா வரியை எப்படிக் குறைக்கலாம்?

ஒரு காட்சிக்கு 150 ரூபாய் என்று இருந்த வரி 27 ரூபாயாகக் குறைந்தது. 150 ரூபாய் எங்கே? 27 ரூபாய் எங்கே? என்னதான் பேச்சு வார்த்தை நடத்தியிருந்தாலும் 150 ரூபாயாக இருந்த வரி 130 ரூபாயாக அல்லது 100ரூபாயாகவாவது குறைத்திருக்கலாம். ஆனால் இவ்வளவு இடைவெளியில் வரி திடீரென்று பேச்சு வார்த்தைக்குப்பின் குறைந்தது ஏன்?

மக்களுக்கு நியாயமாக ஒரு சந்தேகம் ஏற்படும். 150 ரூபாய் வரி என்பது உரிய லட்சணத்தோடு போடப்பட்ட உத்தரவு அல்ல என்பதும் 27 ரூபாயாகக் குறைந்துவிட்ட காரணத்தால் 150 ரூபாய் என்று அறிவித்திருக்க வேண்டிய நிர்பந்தமும் வழியும் இல்லை என்பதும் தெளிவாகத் தெரியும்.

இவ்வாறு ஈ. வி.கே. சம்பத் பேசினார். உடனே கூட்டத்தில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது.

# ரூபாய் நாணயத்தில் கருத்தடை முழக்கம்

புதுடெல்லி, செப். 1—மத்திய அரசு புதிதாக 50 ரூபாய் நாணயங்கள் வெளியிட முடிவு செய்துள்ளது. அதில் குடும்பக்கட்டுப்பாடு முழக்கங்கள் பொறிக்கப்படும்.

இந்தியாவில் 50 ரூபாய்க்கு நாணயம வெளியிடுவது இதுதான் முதல் தடவை. 10 ரூபாய், 10 காசு நாணயங்களும புதிதாக வெளியிடப்படும்.

இந்த நாணயங்களிலெல்லாம் கருத்தடை முழக்கங்கள் பொறிக்கப்பட்டிருக்கும.

இந்த நாணயங்கள் வேகமாகத் தயாரிக்கப்படுகின்றன.

நிதி இலாக்கா ராஜாங்க மந்திரி கே. ஆர். கணேஷ் இந்தத்தகவலை டெல்லி சட்ட சபையில் வெளியிட்டார்.

# நாகை காங்கிரஸ் தலைவர் ராஜிநாமா

நாகை, செப். 1—நாகை காங்கிரஸ் பிரமுகர் என். மாரிமுத்து.

இவர் நாகை தாலுகா காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகவும், செயலாளராகவும் 42 ஆண்டுகள் இருந்துள்ளார்.

தற்போது நாகை வட்டார பிரதிநிதியாக இருக்கும் இவர் காங்கிரஸ் காட்சியில் இருந்து ராஜிநாமா செய்துள்ளார்.

இவர் தனது ராஜிநாமா கடிதத்தில், "நாகைதாலுகா காங்கிரஸ் கட்சி சர்வாதிகார போக்கில் சென்று வருகிறது. ஆகவே நான் தொடர்ந்து பணியாற்ற முடியாது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்" என்று தெரிவித்துள்ளார்.

# கணபதி இலங்கை சென்றார்

சென்னை, செப். 1—தமிழ் நாடு சட்டசபை துணை சபாநாயகர் கணபதி நேற்று மாலை இலங்கை சென்றார்.

காமன் வெல்த் பாராளுமன்ற மாநாடு இலங்கையில் நடக்கிறது. அதில் கலந்து கொள்வதற்காக துணை சபாநாயகர் என். கணபதி நேற்று மாலை சென்னையிலிருந்து விமான மூலம்கொழும்பு செல்கிறார்.

அங்கு நடைபெறும் மாநாட்டில் கலந்துகொண்டுவிட்டு செப்டம்பர் 16 ம் தேதி பகல் 2-30 மணிக்கு சென்னை திரும்புவார்.

### யூகோநாட்டில் ரெயில் விபத்து

# 100 பேர் மரணம்

பிராங்க்பர்ட், செப். 1—மேற்கு ஜெர்மனியிலிருந்து புறப்பட்டுச்சென்ற சர்வதேச எக்ஸ்பிரஸ் ரெயில் வண்டி யுகோஸ்லாரியா நாட்டில் ஜாகரம நகர் அருகே விபத்துக்குள்ளாகி கவிழ்ந்தது.

இந்த விபத்தில் குறைந்த பட்சம் 100 பேர் இறந்தனர். 150க்கு மேற்பட்டவர்கள் காயமடைந்தனர்.

இந்த விபத்தில் மேலும் பலர் இறந்திருக்கலாம என்று அஞ்சப்படுகிறது.

# கட்டாய டிபாசிட்: ராஜ்ய சபையில் கண்டன வெளிநடப்பு

**புதுடெல்லி, செப். 1—கட்டாய டிபாசிட் மசோதாவைக் கண்டித்து நேற்று ராஜ்யசபையில் எதிர்க்கட்சிகளைச் சேர்ந்த எல்லா உறுப்பினர்களும் வெளிநடப்பு செய்தனர்.**

எதிர்க் கட்சிகளைச் சேர்ந்த பல்வேறு உறுப்பினர்கள் இம் மசோதாவின் ஷரத்துக்களைக் கடுமையாகத் தாக்கிப் பேசினார்கள். இது ஒரு "கருப்பு சட்டம்" என்றும், பார்லிமெண்டரி ஜனநாயகத்தின் வரலாற்றிலேயே இது ஒரு சோக நாளாகும் என்றும் அவர்கள் கூறினார்கள்.

இம் மசோதாவுக்குக் கொண்டுவரப்பட்ட பல திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டு, மசோதா நிறைவேறியது. மசோதா மீது பிரிந்து நின்று வோட்டு எடுக்கப்பட்டது.

இம்மசோதா ஏற்கனவே மக்கள்சபையில் நிறைவேறியுள்ளது.

கட்டாய டிபாசிட் ஏற்பாட்டுக்குப் பதிலாக இஷ்டபூர்வ டிபாசிட்டுக்கு வகை செய்யக் கோரி எதிர்க்கட்சி கொண்டு வந்த திருத்தம் ஒன்று இதற்கு முன்பு தோற்கடிக்கப்பட்டது. திருத்தத்தை ஆதரித்து 20 ஓட்டுகளும் எதிராக 107 ஓட்டுகளும் கிடைத்தன.

பல்வேறு ஷரத்துகளுக்கு மொத்தம 59 திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. குறைந்தபட்சம் 2 திருத்தங்கள் மீது பிரிந்து நின்று ஓட்டு எடுக்கப்பட்டது. இதில் ஒரு திருத்தம் போனஸ்களுக்கு விதிவிலக்கு அளிக்கக் கோரியது

ஷரத்துவாரி விவாதம் ஆரம்பமான போதே சுயேச்சை உறுப்பினரான தின் சென் குப்தா வெளி நடப்பு செய்தார்.

### உயர் வருமான டிபாசிட் மசோதா

வருமானவரி செலுத்துவோர் கட்டாய திட்ட மசோதா நேற்று ராஜ்ய சபையில்நிறைவேறியது. ஜூலை 17ம் தேதி பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டத்துக்குப் பதிலாக அது கொண்டுவரப்பட்டது.

அதிக வருமானமுள்ள வருமான வரி செலுத்தும் தனிப்பட்டவர்களும், இந்து பாகப் பிரிவினை செய்யப்படாத குடும்பங்களும் டிரஸ்டுகளும் வருமானத்தில் ஒரு பகுதியை நடப்பு நிதியாண்டிலும், 1975-76 நிதியாண்டிலும் டிபாசிட் செய்ய வேண்டும என அவசர சட்டம் கூறுகிறது.

அவசரச் சட்டத்தைக் கண்டிக்கும் சுப்ரமண்யசாமியின் (ஜன சங்கம்) தீர்மானத்தை சபை நிராகரித்தது.

விவாதத்துக்கு உதவி நிதி மந்திரி சுசீலா ரோஹட்சி பதிலளிக்கையில், இது வரி விதிப்பு நடவடிக்கை அல்ல என்று கூறினார். உபயோகத்தையும், பணப் புழக்கத்தையும் குறைப்பது இதன் நோக்கம் என்றார்.

# பரிசு பெற்ற 80,000 ரூபாய்; எம். எஸ். சுப்புலட்சுமி நன்கொடை

மணிலா, செப். 1— தமிழ் நாட்டு பாடகி எம். எஸ். சுப்புலட்சுமி நேற்று பிலிப்பைன்ஸ் நாட்டு தலைநகரான மணிலா நகரில், பொது சேவைக்கான விருது பெற்றார்.

பிலிப்பைன்ஸ் தேசத்தின் காலஞ்சென்ற ஜனாதிபதி மாக்ஸேஸே பெயரால் இந்த விருது அளிக்கப்படுகிறது.

ரொக்கம் 10 ஆயிரம் டாலர் (சுமார் 80 ஆயிரம் ரூபாய்) தங்கப்பதக்கம், பாராட்டுப்பத்திரம் ஆகியவைகளை விருதாக எம். எஸ். சுப்புலட்சுமி பெற்றார்.

இந்த விருது பெற்றவுடன், பரிசுத்தொகை முழுவதையும் 3 இந்திய கலாச்சார நிறுவனங்களுக்கு நன்கொடையாக அவர் அளித்தார். பாரதீய வித்தியாபவன். சென்னை வி. எச். எஸ். வைத்திய சேவை நிறுவனம், கும்பகோணம் ராஜா வேதபாடசாலை ஆகிய 3 நிறுவனங்கள் இந்த நன்கொடையைப் பெறும்.

தமக்கு விருது அளிக்கப்பட்டது பற்றி நன்றி தெரிவித்து பேசுகையில், காந்தி, நேரு, ராஜாஜி ஆகிய 3 தலைவர்களின் நினைவுக்கு அஞ்சலி செலுத்தினர்.

பேசுவதற்கு முன்னதாக எம்.எஸ். சுப்புலட்சுமி உருக்கமாக பக்திப் பாடல் ஒன்றைப் பாடினார்.

## விஷ ஊசி வழக்கு

# ஒரே குடும்பத்தைச் சேர்ந்த இரண்டு பேர் பலியான சோகக் கதை

**சென்னை, செப். 1— விஷ ஊசி போட்டு கொலை செய்யப்பட்டவர்களில் இரண்டு பேர் ஒரே குடும்பததைச் சேர்ந்தவர்கள் என்ற தகவல் நேற்று கோர்ட்டில் வெளியாயிற்று.**

ஐந்தாவதாக கொலையுண்ட சித்திக் இப்ராகிம், ஏழாவதாக கொலையுண்ட தைக்கா தமபியின் சிறிய தகப்பனார் என்பதை தைக்கா தம்பியின் மாமனார் கூறினார்.

கஸ்டம்ஸ் அதிகாரிகள் போல் நடித்து, விஷ ஊசி போட்டு, 7 பேர்களைக் கொன்றதாககுற்றஞ்சாட்டப்பட்டுள்ள வைத்தி, மற்றும் 7 பேர் மீது தொடரப்பட்டுள்ள வழக்கு சென்னை செஷன்ஸ்கோர்ட்டில் நீதிபதி விஜயரங்கம் முன்னிலையில் நடைபெற்று வருகிறது.

நேற்று போலீஸ் தரப்பு 171-வது சாட்சியாக தைக்கா தம்பியின் மாமனார் செய்யது அகமது விசாரிக்கப்பட்டார். அப்போது அவர் கூறியதாவது:—

தைக்கா தம்பி காணாமல் போன விஷயம் குறித்து. சுல்தான் என்பவரிடம் பேசினேன். எங்களுக்கு அப்பொழுது, சாரதி, தாவூத், கண்ணன் (குற்றஞ்சாட்டப்பட்டுள்ளவர்கள்) ஆகியோர் மீது சந்தேகம் ஏற்பட்டது. ஒரு கூட்டமே இயங்குகிறது. இது பற்றி போலீசில் புகார்செய்ய வேண்டும் என்று பேசிக் கொண்டிருந்தோம்.

தாவூத் எங்கள் ஊர்க்காரர். சிறு வயது முதலிருந்தே எனக்குத்தெரியும. தாவூத்தையும், சாரதியையும் பார்க்க முயற்சித்தேன். முடியவில்லை. 2-11-72ல் ஏழுகிணறு காவல் நிலையத்தில் புகார்செய்தேன். அவர்கள் என்னை விசாரித்தார்கள்.

16—3—73ல் சென்னை ரகசிய போலீசார் என்னை விசாரித்தனர். தைக்கா தம்பியின் புகைப்படங்களை காட்டினர். அப்பொழுது சித்திக் இப்ராகிம் (5-வது கொலை) புகைப்படத்தையும் என்னிடம் காட்டினர். அவர் தைக்கா தம்பியின் சிற்றப்பா வாகும்.

மேற்கண்டவாறு செய்யது அகமது கூறினார். அவரை எதிரி தரப்பு வக்கீல்கள் குறுக்கு விசாரணைசெய்தனர்.

அடுத்து போலீஸ் தரப்பு 172-வது சாட்சியாக தைக்கா தம்பியின் மனைவி சுகதாபீவி (வயது 23) விசாரிக்கப்பட்டார். இவருக்கு 3 வயதில் ஒரு பையனும், 4 வயதில் ஒரு பெண் குழந்தையும் உள்ளனர். கோர்ட்டிற்கு தன்னுடைய பெண்ணை அழைத்து வந்திருந்தார்.

முஸ்லிம் சம்பிரதாயப்படி "காம்ரா"வினுள் விசாரிக்கப்பட்டார். பத்திரிகை நிருபர்களைத் தவிர பார்வையாளர் எவரும் அனுமதிக்கப்படவில்லை.

### தைக்காதம்பி மனைவியின் உருக்கமான சாட்சியம்

சுகதாபீவி கூறியதாவது!—

என்னுடைய தந்தையின் பெயர் செய்யது அகமது. (முந்தைய சாட்சி) எங்கள் சொந்த ஊர் கீழக்கரை. நான் ஆறும் வகுப்பு வரை படித்திருக்கிறேன்.

(தைக்கா தம்பி உங்கள் கணவரா? என்று அரசாங்க வக்கீல் கேட்டார்.) ஆம், 25—6—67 அன்று எங்களுக்கு திருமணம் நடந்தது. திருமணத்தின் போது எடுக்கப்பட்ட புகைப்படத்தையும் அப்போது கட்டியிருந்த சேலையையும் கோர்ட்டில் அடையாளம் காட்டினார்.

திருமணத்திற்கு ஓராண்டு முன்புதான் அவர் இலங்கையிலிருந்து வந்தார். எங்களுடைய திருமணத்திற்கு பிறகு அவர் வெளிநாடு எதற்கும் போகவில்லை. திருமணத்திற்கு பிறகு வியாபார விஷயமாக மாதத்திற்கு ஒருமுறை. இரண்டுமுறை சென்னைபோய் வந்து கொண்டிருந்தார். அப்படி வரும்பொழுது ஆயிரக்கணக்கில் பணம் கொண்டு வருவார்.

(கடைசியாக அவர் எப்போது சென்னைக்குச் சென்றார் என்று அரசாங்க வக்கீல் கேட்ட பொழுது, அவர் அழுது கொண்டே பதிலளித்தார்.)

1972-ம் ஆண்டு அக்டோபர் மாதம் "கிராத்" என்ற நோன்பிற்கு 2 நாள் கழித்து அவர் சென்னைக்கு சென்றார். போவதற்கு முன்பு. அவர் தன்னுடைய தாயாரின் பெயருக்கு 3 ஆயிரம் ரூபாயில் நிலம் வாங்கினார்.

### நகைகளை விற்று வியாபாரம்

சென்னை செல்வதற்கு முன்பு அவர் என்னிடம் 'உன் நகைகளைக்கொடு, வியாபாரம் செய்து இதை விட உனக்கு நிறைய நகைகள் செய்து போடுகிறேன்..." என்று கேட்டார். என்னுடைய தாலி செயின் (3½ பவுன்), வளையல் (20 பவுன்), கம்மல் தோடு (6 பவுன்), தலையில் அணியும் நகை (3½ பவுன) குழந்தைகள் வளையல், மோதிரம் எல்லாவற்றையும் சேர்த்து 40 பவுன் நகைகளை அவரிடம கொடுத்தேன்.

சென்னைக்கு என் கணவருடன் முகம்மது தம்பி, இப்ராகிம், ஹபீப முகம்மது ஆகியோர் சென்றார்கள். ரம்சான் பண்டிகைக்கு 2 நாள் முன்னதாக மற்ற மூவரும் திரும்பி வந்தார்கள். ஆனால் என் கணவர் வரவில்லை. என் கணவர் வெளியூர் போயிருப்பதாக கூறினார்கள்.

(அரசாங்க வக்கீல் தைக்கா தம்பியின் புகைப்படத்தைக் காட்டியதும், அதைப் பார்த்துவிட்டு, குலுங்கி குலுங்கி அழுதார். இறந்துபோன தைக்கா தம்பின் புகைப்படத்தை அரசாங்க வக்கீல் காட்டி "இவர் என்று கேட்டதும் உங்கள் கணவர்தானா?"

2-ம் பத்தி பார்க்க

## வாசகர்களின் கேள்விக்கு நவமணி ஜோதிடர் பதில்

வாசகர்களே ! உங்களின் படிப்பு — உத்தியோகம் — வியாபாரம் — திருமணம்—காதல் மற்றும் உங்கள் குழந்தைகள்—குடும்ப சம்பந்தப்பட்ட கேள்விகளுக்கு நவமணி ஜோதிடர் பதில் சொல்கிறார்.

கேள்வியுடன் உங்கள் பெயரையும், 249-க்குள் ஒரு எண்ணையும் குறிப்பிட்டு எழுதவேண்டும். முடிந்தால் பிறந்தநாள், ராசி, நட்சத்திரம் ஆகிய விவரத்தையும் குறித்து அனுப்பலாம்.

வாசகர்கள் ஒரு கடிதத்தில் ஒரு கேள்விக்கு மேல் கேட்கக்கூடாது. கேள்விகளை அனுப்பவேண்டிய முகவரி: 'ஆசிரியர், 'ஜோதிடர் பதில்' நவமணி சென்னை-28' பதில்கள் வியாழக்கிழமையும், ஞாயிற்றுக்கிழமையும் 'நவமணி'யில் வெளிவரும்.

மு. சந்திரன்
ஆரணி (வ. ஆ)

### எண் — 150

கேள்வி: என் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதை தெளிவுபடுத்தவும்.

பதில்: எதிர்காலம் நன்றாகவே அமைகிறது. ஆரம்பத்தில் பலவித தொல்லைகள். கஷ்டங்கள் வாழ்க்கையில் காட்டியதுடன். எதிலும் தனக்கு பாதகமான சூழ்நிலையிலேயே இதுவரை காலம் சென்றிருக்கிறது. தங்களுக்கு 1½ வருடங்களுக்கு பிறகு இருந்து தொடர்ந்து நல்ல காலம் நடைபெறும்.

★ ★ ★

எஸ். கதிர்வேல்
சேலம்-14

### எண் — 129

கேள்வி: நான் இப்போது ஒரு வியாபாரத்தை தொடங்கியிருக்கிறேன். வியாபாரத்தில் மனக்கசப்பாக உள்ளது, நான் நினைத்தது நடக்குமா?

பதில்: தாங்கள் நினைத்தது கடும் முயற்சிக்குப்பின் எண்ணியபடி நடக்கும். வியாபாரத்தில் பலவித தடங்கல்களும், மனவெறுப்பும் காட்டும், வியாபாரத்தை மாற்றி அமைக்கவேண்டிய சந்தர்ப்பமும் உண்டாக்கும்.

★ ★ ★

எஸ். தண்டபாணி
சேலம்-1

### எண் — 7

கேள்வி: உத்தியோக உயர்வு எப்போது கிடைக்கும்?

பதில்: தங்களுக்கு 1975 ஜனவரி மாதம் உத்தியோக உயர்வு கிடைக்கும்.

★ ★ ★

என். லோகநாதன்
சென்னை-1

### எண் — 147

கேள்வி: எந்த தொழில் செய்யலாம்?

பதில்: தங்கள் எண்ணின் படியும், சனி, செவ்வாய் பலம் மிகுந்து காணப்படுவதால், இயந்திர சம்பந்தப்பட்ட சிறு தொழில்கள், ரசாயனம் சம்பந்தப்பட்டது. இரும்பு சம்பந்தப்பட்ட சிறு பொருட்கள், உற்பத்தி போன்றவை லாபம்தரும்.

★ ★ ★

இரா. வேலன்
சென்னை - 81

### எண் — 4

கேள்வி: எனது மகளை மேலும் படிக்கவைக்கலாமா? அல்லது எனது மனைவியின் விருப்பப்படி திருமணம் செய்து வைக்கலாமா?

பதில்: தங்கள் மனைவியின் விருப்பப்படி திருமண ஏற்பாடுகளை தங்கள் மகளுக்கு செய்வது சிறந்ததாக தங்கள் எண்ணின்படி தெரிகிறது.

★ ★ ★

மு. சுந்தர், திண்டுக்கல்

### எண் — 156

கேள்வி: பத்திரிகை ஆசிரியராக இருக்கவேண்டுமென பெரிதும் விருப்பப்படுகிறேன். போதிய திறமையும் இருக்கிறது. ஆனால் கடந்த இரண்டு வருடமாக இந்த வேலைக்கு முயற்சி செய்து பலன் இல்லை. தயவு செய்து இந்த வேலை எப்போது கிடைக்கும்? வயது 19.

பதில்; தங்கள் எண் ரீதியாக தாங்கள் தற்போதுள்ள கிரக அமைப்பில் பத்திரிகை ஆசிரியராக வர சந்தர்ப்பம் இல்லை. தாங்கள் வேறு துறையில் வேலைக்கு முயற்சித்து வேலை அடைந்தபின் 25 வயதுக்குப்பின் பத்திரிகை துறைக்கு வர முயற்சிப்பது நன்மை உண்டாக்கும்.

★ ★ ★

கே. தட்சணாமூர்த்தி
திண்டிவனம்

### எண் — 240

கேள்வி: எனக்கு எப்போது வேலை கிடைக்கும்? உள்ளூரா, வெளியூரா? மேற்கொண்டு படிக்க முடியுமா?

பதல்: தங்களுக்கு வெளியூரில் வேலை கிடைக்கும், உத்தியோக வாய்ப்புக்கான காலம் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இந்த ஆண்டு டிசம்பருக்குள் தொழில் கிடைக்கும்.

★ ★ ★

ஆர். லோகநாதன்
சென்னை

### எண் — 86

கேள்வி:—எந்த தொழில் செய்தால் முன்னேற்றம் ஏற்படும்?

பதில்:— வியாபாரம் பொருத்தமுடையது. பல சரக்கு போன்ற பல பொருட்கள் விற்பனை நன்மை உண்டாக்கும்; கூட்டு சம்பந்தமான தொழில்களும் லாபமே. சிறுரக இயந்திர சம்பந்தமான தொழில்களும்லாபமே.

★ ★ ★

எஸ். எம். இஸ்மாயில்
கும்பகோணம்.

### எண் — 241

கேள்வி: எனக்கு திருமணம் எந்த வருஷம் எந்த மாதத்தில் நடைபெறும் என்பதை அன்புடன் கூறுங்கள்.

பதில்: தங்கள் எண்ணின் படி கடும் கிரக தோஷத்தால் தங்கள் எண் பாதிக்கப்பட்டிருப்பதால் சமீப எதிர்காலத்தில் திருமணம் நடைபெறும் சாத்தியக் கூறு இல்லை. இருப்பினும் தாங்கள் தங்கள் நடப்பு வயது மற்றும் வேறொரு எண் குறித்து 1974 நவம்பர் மாதத்துக்குமேல் நவமணிக்கு எழுதுங்கள்.

★ ★ ★

என். எஸ். ரஷீத் அஹமத்,
சென்னை-13.

### எண் — 15

கேள்வி;-நான் 1—4—52-ல் அதிகாலையில் பிறந்தவன் என்னுடைய ராசி எது? அதிர்ஷ்ட எண் என்ன? என் கல்விவிஷயத்தில் என் நிலைமை எப்படி உள்ளது? நான் என்று பட்டப்படிப்பை முடிப்பேன்?

பதில்:- தங்கள் பிறந்த தேதிப்படி தங்கள் ராசி "மிதுனம்". நீங்கள் பிறந்த நட்சத்திரம் "மிருகசீரிஷம்" அதிர்ஷ்ட எண்—4, 1. கல்வி விஷயத்தில் பல தடங்கல்களைக் காட்டியே வெற்றி உண்டாகும். விரைவில் பட்டப் படிப்பை முடிக்கும் சாத்தியமுண்டு.

★ ★ ★

பி. செல்வராசு,
செஞ்சி.

### எண் — 125

கேள்வி: நான் எதுவரையில் படிப்பேன்? தொழிலை கற்றுக்கொள்வேனா? என் எதிர்காலம் எப்படி இருக்கும்?

பதில்: தங்களுக்கு நடுத்தர கல்வி மட்டும் படிப்பது சாத்தியமே. தொழில்துறையில்தான் முன்னேற்றம் பெற முடியும். உயர் கல்வி கிடையாது. மேலும் எதிர்காலம் தொழில் துறையில் வெற்றி பெற்று முன்னேற்றம் பெறுவீர்கள்.

★ ★ ★

சீதா,
திருவல்லிக்கேணி, சென்னை-5

### எண் — 149

கேள்வி: எஸ். எஸ். எல். சி. பரீக்ஷையில் ஆங்கிலத்தில் சரியான மார்க்கு வாங்காததால் பாஸ் ஆகவில்லை. தற்போது வருகிற அக்டோபர் மாதம் பரீக்ஷைக்கு பணம் கட்டலாம் என எண்ணியுள்ளேன்? பணம் கட்டலாமா? வெற்றிபெற வாய்ப்பு உண்டா?

பதில்: தாங்கள் அக்டோபர் பரீக்ஷையில் பணம் கட்டினால் தேவையான மார்க்குடன், வெற்றிபெறும். வாய்ப்பு உண்டு.

★ ★ ★

நா. திலகன்,
பூவிருந்தவல்லி.

### எண் — 37

கேள்வி: நான் காதலிக்கும் பெண் என்னை மனப்பூர்வமாய் விரும்புகிறாள். எங்கள் காதலுக்கு பெரியோர்கள் தடையாய் இருக்கிறார்கள். அதனால் அவள் என்னைவிட்டு விலகப்பார்க்கிறாள் நான் என்ன செய்வது? (வயது 20)

பதில்: தாங்கள் காதலிக்கும் பெண், மனப்பூர்வமாக உங்களை, காதலிக்கவில்லை; மேலும், ஸ்திரமான எண்ணமும் உங்கள் காதலிக்கு கிடையாது என்பதுவே எண் ஜோதிடக் கலையின் அறிவிப்பாகும். தங்கள் காதல் உண்மையானதே. உங்கள் காதலியை திருமணம் செய்ய முடியாது. விலகிவிடுவது உங்களுக்கு நன்மைதரும்.

★ ★ ★

டி. இ. சிவசங்கரன்
சென்னை-1

### எண் — 175

கேள்வி: நான் தற்போது செய்துவரும் வேலை நிரந்தரம் ஆகுமா? நிரந்தரம் ஆனால் கடைசிவரை இந்த வேலையில் இருப்பேனா?

பதில்: தாங்கள் தற்போது செய்யும் வேலை நிரந்தரம் அல்ல. கடைசிவரை அதில் நிடிப்பது கஷ்டம், மாற்றம் உண்டாகும். அடுத்த 1½ ஆண்டில் மாற்றம் ஏற்படுத்தும்.

★ ★ ★

உத்திராபதி
சிதம்பரம்

### எண் — 149

கேள்வி எனது எதிர்காலம் பற்றி தெரிவிக்கவும்?

பதில்: தங்கள் எண்ணின் படி இதுவரை நடந்த திசைகளைப்பார்த்தால்தொடர்ந்து பொருளாதார கஷ்டங்களும் கடும்சோதனைகளும் நிறைந்ததாகவே நடைபெற்று வந்திருக்கிறது. ஒரு வருஷத்துக்குப்பின், உங்களுக்கு எதிர்காலம் படிப்படியாக முன்னேற்றம் பெற்று சிறப்படையும்.

★ ★ ★

எல். பூலோகநாதன்
சென்னை - 1

### எண் — 234

கேள்வி: எனக்கு திருமணம் எப்போது நடக்கும்? மனைவியின் மூலம் சொத்துக்கள் வர வாய்ப்பு உண்டா? மனைவி அழகும் படிப்பும் உள்ளவளாக இருப்பாளா? உறவா அசலா?

பதில்; தங்களுக்கு திருமணம் 1976-ம் ஆண்டு பிப்ரவரிமாதம் நடைபெறும். மனைவி கல்வி அறிவுள்ள படித்த பெண்ணாகவும், அழகுள்ள பெண்ணாகவும் வருவாள். உறவுப் பெண்தான். பணம் மனைவிவழி கிடைக்க வாய்ப்பு உண்டு.

★ ★

பா. ரா. எஸ். மணியன்
(செங்கை) நெல்லை

### எண் — 6

கேள்வி; நான் இப்போது ஒரு கம்பெனிக்கு வேலை கேட்டு மனு போட்டிருக்கிறேன். எனவே நான் எதிர்பார்க்கும் வேலை கிடைக்குமா? கிடைத்தால் எவ்வளவு நாட்களுக்குள் கிடைக்கும்?

பதில்; தாங்கள் தற்போது மனு போட்டிருக்கும் கம்பெனி வேலை தங்களுக்கு கிடைக்காது என்று தெரிகிறது. ஆகவே தாங்கள் வேறு வேலைக்கு முயற்சிப்பது நன்மை உண்டாகும்.

★ ★ ★

கே. ராமையா
சென்னை

### எண் — 247

கேள்வி: நான் 7 வருடகாலமாக மளிகை கடை நடத்துகிறேன். அதை மாற்றி வேறு வியாபாரம் செய்ய நினைக்கிறேன். என்ன தொழில் செய்யலாம்? கூட்டு வியாபாரம் (தவணை முறை சம்பந்தப்பட்டது) விருத்தியாகுமா?

பதில்: தாங்கள் எண் ரீதியில்கூட்டுவியாபாரம் தவணை முறை சம்பந்தப்பட்டது செய்யலாம் என்றிருப்பினும் தற்சமயம் கிரகநிலைகள் அனுகூலமாக இல்லை. ஆகவே 1975 ஆகஸ்ட் மாதத்துக்கு மேல் வியாபாரத்தை மாற்றுவது நன்மைஉண்டாக்கும் இதற்கிடையில் மாற்றம் எதிர்பார்த்த நன்மையை செய்யாது.

★ ★ ★

சு. மனோகரன்
சைதப்பேட்டை
சென்னை-15

### எண் — 240

கேள்வி : எனது கல்வியினுடைய நிலைமை எவ்வாறு அமையும்?

பதில் : தங்கள் கல்வியினுடைய நிலைமையைப் பார்க்கையில் தடங்கலையே உண்டாக்குகிறது. அடுத்து ஒரு வருடமும் பல தடங்கல்களும் வெற்றிக்குப் பதில் பல தோல்விகளையுமே ஏற்படுத்தினாலும், அதன்பின் இரண்டு வருடத்துக்கு கல்வி தொடரக்கூடிய வாய்ப்பு உண்டு.

★ ★ ★

ரா. திருநாவுக்கரசு,
திருச்சி-8.

### எண் — 24

கேள்வி:- நான் தற்போது இருக்கும் கடையில் சம்பளத்தில் அமர்ந்தேன். சுமார் 6½ ஆண்டுகளாக இதிலிருந்தும் யாதொருவித சுபிட்சத்லதயும் அடைய முடியவில்லை. ஆகையால் கடையிலிருந்து விலகி வேறு இடத்தில் சம்பளத்திற்கு சேரலாமென்று நினைக்கிறேன். அப்படி வாய்ப்பு உண்டா? இருந்தால் எப்போது வரும்?

பதில்:- தங்களுக்கு தற்போதுள்ள இடத்திலிருந்து வேறு இடத்துக்கு மாறும் வாய்ப்பு உள்ளது. இந்த ஆனந்த ஆண்டு தைமாதம் அதற்கன வாய்ப்பு உண்டாகும்.

## வேளாங்கண்ணி திருவிழா: 16 கிராமங்களில் காலரா ஊசி

நாகை, செப். 1-நாகையை அடுத்த வேளாங்கண்ணித் திருவிழாவையொட்டி வரும் பக்தர்களுக்கு தேவையான வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

### காலரா தடுப்பு

வேளாங்கண்ணியை சுற்றி 16 கிராமங்களில் அம்மை, காலரா தடுப்பு ஊசிகள் போடப்பட்டுள்ளன.

குடி தண்ணீர் வசதிக்காக எல்லா கிணறுகளும் சுத்தப் படுத்தப்பட்டுள்ளன.

ஊராட்சி ஒன்றியத்தின் சார்பில் பல கடைகள் கட்டப் பட்டுள்ளன.

குழந்தைகளுக்கு ஹார்லிக்ஸ் போன்ற சத்துணவை இலவசமாக தஞ்சை மேற்றி ராணியார் பூஜ்யர் சுந்தரம் வழங்க ஏற்பாடு செய்துள்ளார்.

### சாரணர் குழு

மாவட்ட சாரண ஆணையர் எஸ். பாலசுப்பிரமணியம் தலைமையில் சாரணர் குழு பணியாற்றுகிறது.

சுகாதார ஏற்பாடுகளை ஆணையர் சிவராமன், மாவட்ட சுகாதார அதிகாரி அய்யாத்துரை ஆகியோர் கவனித்து வருகின்றனர். பிரதம சுகாதார ஆய்வர் நாராயணசுவாமியும் கவனித்து வருகிறார்.

பஞ்சாயத்து தலைவர் ஆரோக்கியசாமி, ஒன்றியத் தலைவர் ஆர். ஆர். வரதராஜுலு நாயுடு ஆகியோர் சகல ஏற்பாடுகளையும் கவனித்து வருகின்றனர்.

### திருமணம்

சென்னை, செப். 1—மவுண்டு ரோடு தபால் அலுவலகத்தில் பணியாற்றும் கே. சுந்தரத்தின் பெண் உமாவுக்கும், பம்பாய் டாடா இன்ஸ்டிடியூட் ஆராய்ச்சி நிறுவனத்தில் மெகானிகல் எஞ்சினீயராகப் பணியாற்றும் கே. முத்துசாமிக்கும் தியாகராய நகர் திருமலைப்பிள்ளை ரோடில் உள்ள திருமலை திருமண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடந்தது.

## என் பேராசை அழிந்தது: சசிகுமார் மரணம் பற்றி சிவாஜிகணேசன் உருக்கம்

சென்னை, செப். 1—நடிப்புத்துறையில் எனக்கு வாரிசு வேண்டும் என்று நினைத்து, சசிகுமாரின் நடிப்பில் நான் மிகுந்த அக்கறை செலுத்தினேன்; எனது பேராசை அழிந்தது என்று நடிகர் சிவாஜி கணேசன் உருக்கமாகக் கூறினார்.

நடிகர் சசிகுமார் மறைவு குறித்து அனுதாபம் தெரிவிப்பதற்காக நேற்று மாலை சென்னை ராயப்பேட்டை சத்தியமூர்த்தி பவனத்தில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்தில் சிவாஜி கணேசன் உணர்ச்சி வசப்பட்டு தழுதழுத்த குரலில் பேசினார்.

அவர் கூறியதாவது:—

"நடிகர் சசிகுமார் மறைவு குறித்து அனுதாபம் தெரிவிப்பதற்காக அல்லது அவருடைய புகழை எடுத்துக்கூறுவதற்காக நாம இங்கு கூடியிருக்கிறோம். அவரைப்புகழ்ந்தாலும் அனுதாபம் தெரிவிப்பதாகும். அனுதாபம் தெரிவித்தாலும் புகழ்ந்துரைப்பதாகும். அவருடைய பெற்றோர்க்கு அனுதாபம் தெரிவிக்கும் நிலையில் இருக்கிறோம். இளைஞர்களான நமக்கு நாமே ஒருவருக்கொருவர் அனுதாபம் தெரிவிக்கக்கூடிய நிலையில் இருக்கிறோம்.

நடிப்புத் துறையில் எனக்கு வாரிசு வேண்டும என்று நினைத்து சசிகுமாரின் நடிப்பில் மிகவும் அக்கறை செலுத்தினேன். எனது பேராசை அழிந்தது.

சசிகுமார் தலைசிறந்த தேசபக்தராக விளங்கினார். அவருடைய உதாரணத்தைப் பார்த்து வாலிபர்கள் தேசபக்தியை வளர்க்கவேண்டும்.

ஆண்டவன் சில சமயங்களில் கருணையற்றவராக இருக்கிறான். சசிகுமார் என்ற முக்கிய தொண்டரை அளித்திருந்தார். இனி இவ்வித தொண்டரைப் பெறுவதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும்! சுயநலனை முன்னிட்டு நாட்டு நலனை முன்னிட்டு ஆண்டவனைத் திட்டுகிற நிலையில் நாம் இருக்கிறோம்.

சசிகுமார் மறைவு, காங்கிரஸ் கட்சிக்கும், நாட்டுக்கும் பேரிழப்பாகும்," என்றார் சிவாஜி கணேசன்.



### காமராஜர்

பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜர் பேசுகையில், சசிகுமாரை சிறந்த தேசபக்தர் என்று வர்ணித்தார்.

அவர் கூறியதாவது:—

"சசிகுமாரைப் போன்ற தேசபக்தர்கள் நாட்டில் ஒரு சிலர்தான் இருப்பார்கள். நாட்டுக்காக போர் முனையில் போராடவும் சரி, தூக்கு மேடை ஏறவும் சரி ஒரு சிலர்தான் இருப்பார்கள். இப்படிப்பட்ட ஒரு சிலரால் தான் கோடானு கோடி மக்களுக்கு நன்மை கிடைக்கிறது; நாட்டுக்கு விடுதலை கிடைக்கிறது. அப்படிப்பட்ட ஒரு சிலரில் சசிகுமார் ஒருவர் என்றால் அது மிகையாகாது.

ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் இறக்கும் தருவாயிலும் நாட்டு நலனிலேயே அவர் சிந்தனை கொண்டிருந்ததை நேரில் கண்டேன். உடல் கருகிய நிலையிலும், உயிருக்காக துடித்துக்கொண்டிருந்த நிலையிலும் நாட்டைப் பற்றியே கவலைப்பட்டார். நாட்டுப்பற்றுக்கு சிறந்த உதாரணமாக விளங்கினார்" என்றார் காமராஜ்.

அகில இந்திய சிவாஜி கணேசன் ரசிகர் மன்றத்தின் ஆதரவில் நடந்த இந்த கூட்டத்திற்கு அதன் தலைவர் சின்ன அண்ணாமலை தலைமை வகித்தார். அவர் பேசுகையில், காங்கிரஸ் கட்சிக்கு தூண்போல் சசிகுமார் விளங்கினார் என்றார்.

தமிழ்நாடு பழைய காங்கிரஸ் குமரி அனந்தன் பேசுகையில். சசிகுமாரை ஏகலைவனுக்கும் துரோணரை காமராஜருக்கும் ஒப்பிட்டுப் பேசினார். நொந்தே போயினும் வந்தேமாதர முழக்கத்துடன் உயிர் துறந்த சிறந்த தேசபக்தர் சசிகுமார் என்றார் குமரி அனந்தன்.

நடிகர் மேஜர் சுந்தரராஜன், நடிகர் ஸ்ரீகாந்த், டைரக்டர் சீனிவாசன், அகில இந்திய சிவாஜி கணேசன் ரசிகர் மன்றச் செயலாளர் புரசை குமரன் ஆகியோரும், சசிகுமார் மறைவுக்கு அஞ்சலி செலுத்திப் பேசினார்கள்.

சசிகுமாரின் தகப்பனார், சகோதரர்கள் ஆகியோர் உள்பட அவருடைய குடும்பத்தினர், இந்தக் கூட்டத்திற்கு வந்து மிகுந்த சோகத்துடன் அமர்ந்திருந்தனர். கூட்ட முடிவில் அனைவரும் ஒரு நிமிட நேரம் மவுனமாக எழுந்து நின்றார்கள்.

பதுங்கியிருந்து பிடித்தனர்

## 130 மூட்டை நெல்லுடன் கடத்தல்லாரி பறிமுதல்

பட்டுக்கோட்டை, செப் 1- ரூ. 14 ஆயிரம் மதிப்புள்ள நெல்மூட்டைகளை லாரியுடன் போலீசார் கைப்பற்றினர்.

பட்டுக்கோட்டையை அடுத்த நெடுவாசல் கிராமம் அருகே நள்ளிரவில் பட்டுக்கோட்டை போலீஸ் டிப்டி சூப்பிரெண்டு ஏ. எம். அபிபுலலா, இன்ஸ்பெக்டர் சின்னத்தம்பி, டிப்டி இன்ஸ்பெக்டர் ராஜாராம், கீமங்கலம் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் எம். வெள்ளைச்சாமி ஆகியோர் பதுங்கி இருந்தனர்

அப்போது எம். டி. எப். 3343 என்ற எண்ணுள்ள நாடியம்பாள் ரோடவேஸ் என்ற லாரி புதுக்கோட்டை நோக்கி மின்னல் வேகத்தில் சென்று கொண்டிருந்தது.

பதுங்கி இருந்த போலீஸ் அதிகாரிகள் அந்த லாரியை தடுத்து நிறுத்தி சோதனையிட்டனர். லாரியில் 130 நெல் மூட்டைகள் இருந்தன. அவை பர்மிட் இல்லாமல் வெளி மாவட்டத்திற்கு கடத்தப்பட இருந்தது என்று தெரிகிறது.

அந்த லாரியுடன் 130 நெல் மூட்டைகளையும் போலீஸ் அதிகாரிகள் கைப்பற்றினர்.

லாரியில் இருந்த அதன் உரிமையாளர் ஏ. எஸ். ஆறுமுகம் செட்டியார் லாரி டிரைவர் புதுக்கோட்டை அழகேந்திரன் ஆகிய 2 பேர்களையும் போலீசார் கைது செய்தனர்.

கைப்பற்றப்பட்ட நெல் மூட்டைகளின் மதிப்பு ரூ. 14 ஆயிரம் ஆகும்.

## பத்திரம் எழுதுவதில் மோசடி: வக்கீல் குமாஸ்தா கைது

பட்டுக்கோட்டை செப். 1- ஒரு ஏக்கர் நிலத்திற்குப் பதிலாக 9 ஏக்கர் என்று மோசடியாக பத்திரம எழுதியதாக 2 பேர்களை போலீசார் தேடி வருகின்றனர்.

இந்த பரபரப்பான சம்பவம் பற்றிக் கூறப்படுவதாவது;—

ஒரத்தநாடு தாலூகா ஆம்பற்பட்டு கிராமத்தைச் சேர்ந்த வ்வசாயி அண்ணாமலை. அவருக்குச்சொந்தமாக ஒரே இடத்தில் 9 ஏக்கர் நிலம் இருக்கிறது.

அதில் ஒரு ஏக்கர் நிலத்தை அதே ஊரைச் சேர்ந்த ரங்கசாமி. வடிவேலு ஆகியோர் 6 ஆயிரம் ரூபாய்க்கு விலைபேசி பத்திரம் எழுதப்போனார்களாம்.

பத்திரம் எழுதும்போது வக்கில் குமாஸ்தா காசிநாதன் என்பவரிடம் ஒரு ஏக்கர் என்பதை மாற்றி 9 ஏக்கர் என்றும், கிரயத் தொகை 6 ஆயிரம் என்பதை 26 ஆயிரம் ரூபாய் என்று எழுதச் சொன்னார்களாம்.

அதன்படியே காசிநாதன் பத்திரம எழுதி நிலச்சொந்தக்காரர் அண்ணாமலையிடம படித்துக்காட்டியபோது '1 ஏக்கர் நிலம 6 ஆயிரமரூபாய் கிரயத் தொகை' என்று மாற்றிப்படித்துக் காட்டினார்களாம.

பத்திரம எழுதியதில் மோசடி நடந்திருப்பதை அண்ணாமலை அறிந்தார். இது குறித்து கிராமப் பஞ்சாயத்தில் புகார் செய்தார். கிராமப் பஞ்சாயத்தார் கூடிப் பேசிக்கொண்டிருக்கும்போது ரெங்கசாமி, வடிவேலு ஆகிய 2 பேரும சாமித்துரை என்பவர் மூலம பட்டுக்கோட்டை சப்-ரிஜிஸ்திரார் ஆபீசில் திருட்டுத்தனமாக பத்திரம ரிஜிஸ்டர் செய்ய முயன்றார்களாம.

இது குறித்து அண்ணாமலை பட்டுக்கோட்டை போலீசில் புகார் செய்தார். பட்டுக்கோட்டை போலீஸ இன்ஸபெக்டர் துரைராஜ் வழக்குப் பதிவு செய்து மோசடிப் பத்திரம எழுதிய வக்கீல்குமாஸ்தா காசிநாதனை கைது செய்து, தலைமறைவாகி விட்ட ரெங்கசாமி, வடிவேலு ஆகிய 2பேர்களையும தேடிவருகின்றனர்.

## நன்கொடை வசூல்: ஆசிரியர்கள் எதிர்ப்பு

சென்னை, செப். 1—மதிய உணவுத் திட்டத்துக்கு நன்கொடை வசூலிக்கும் பொறுப்பிலிருந்து ஆசிரியர்களை விடுவிக்கவேண்டும் என்று ஆசிரியர்கள் கூட்டணி பொதுச் செயலாளர் செ. முத்துசாமி வற்புறுத்தினார்.

தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள், செப்டம்பர் 8-ந் தேதி கண்டன ஊர்வலம பொதுக் கூட்டங்கள் நடத்த முடிவெடுத்துள்ளனர்.

ஆசிரியர் கூட்டணியின் கோரிக்கைகளை விளக்கி அவர் கூறியதாவது:—

மத்திய அரசு தனது ஊதிய முடக்க அவசரச் சட்டத்தை வாபஸ் வாங்க வேண்டும்.

தமிழ்நாடு அரசு உடனடியாக மூன்றாவது சம்பள கமிஷன் அமைக்கவேண்டும். இப்பொழுது அமைத்தால் தான் 1975ல் சம்பள உயர்வு தர முடியும்.

மத்திய அரசு 6 தடவை பஞ்சப்படி உயர்வு அளித்துள்ளது. தமிழ்நாடு அரசு 2 முறைதான் கொடுத்துள்ளது. மற்ற மாநிலங்களிளெல்லாம் கொடுத்துவிட்டார்கள்.

சமபள கமிட்டி அமைப்பதாகக் கூறுவதெல்லாம திசை திருப்பும முயற்சியாகும. முதலில் அகவிலைப்படி உயர்வைக் கொடுத்து விட்டு பிறகு கமிட்டி அமைக்கட்டும.

ஆசிரியர்களை, மதிய உணவு திட்டப் பொறுப்பிலிருந்து விடுவிக்க வேண்டும். மதிய உணவுக்கு ஒரு மாணவனுக்கு 10 காசு வீதம் அனுமதிக்கப்பட்டுள்ளது. இதில 6 காசு அரசும், 2 காசு உள்ளாட்சி மன்றமும் அளிக்கின்றன. எஞ்சிய 2 காசை ஆசிரியர்களே நன்கொடை மூலம் திரட்ட வேண்டும்என்று இருக்கிறது. இந்தப் பொறுப்பை பஞ்சாயத்து யூனியனிடமும், இளைஞர் அணியிடமும் கொடுத்துவிட்டு அதிலிருந்து ஆசிரியர்களை விடுவிக்கவேண்டும்.

ஆசிரியர்களுக்கு நியாய விலைக்கடைகள் மூலம் அத்தியாவசிய பண்டங்கள் விநியோகிக்கப்படவேண்டும். இவ்வாறு முத்துசாமி கூறினார்.

# மரம் என்று நினைத்து மலைப் பாம்புக்குத் தீ!

(பிலோ இருதயநாத்)

**மரம் என்று நினைத்து மலைப்பாம்பின்மீது தீ மூட்டிய ருசிகரச் சம்பவம் ஒன்றை கொடைக்கானல் மலைவாசியான கிழவர் ஒருவர் விவரித்தார். இவர் அந்தப் பகுதியில் காணப்படும் "குடும்பப் பள்ளர்" என்ற இனத்தைச் சேர்ந்தவர்.**

**பிரபல மானிட இயல் அறிஞர் பிலோ இருதயநாத், அப்பகுதிக்கு சென்று தாம் கேட்டறிந்த விஷயங்களை இங்கே விவரிக்கிறார்.**

பழைய காலத்தில் மேலை நாடுகளில் வாழ்ந்த 'கிர்ஜீஸ்' என்ற நாடோடி மக்களைப் பற்றி பலர் படித்திருக்கலாம். 'கிர்ஜீஸ்' என்பதற்கு 'திருட்டு நாடோடி' என்று பொருள். அவர்கள் இன்னொரு கிராமத்திற்குப் போய் கால்நடைகளையும் மற்றும் பல பொருட்களையும் திருடிக்கொண்டு ஓடுவார்களாம்.

கொடைக்கானல் மலைப் பிராந்தியத்தில் "கண்கரட்டு சாப்பு" மலையடிவாரத்தில் "குடும்பப் பள்ளர்" எனும் இனத்தைச் சேர்ந்த சுமார் 120 வயதுள்ள ஒரு கிழவர் அண்மையில் கூறிய சுவையான வரலாற்றை நினைக்கும்போது அப்படிப்பட்ட கொள்ளையர்கள் நம் நாட்டிலும் இருந்திருப்பது புலனாகும்.

அவர் கூறிய விவரம் "நான் வாலிபனாக இருக்கும் பொழுது மாலையில் சூரியன் மறைவதற்கு முன் எல்லோரும் கிராமங்களுக்கு வந்துவிடுவார்கள். கொள்ளைக் கூட்டத்தினர் குதிரையின் மேல் வருவதையும் கொள்ளை அடித்ததையும் நேரில் கண்டிருக்கிறேன். மேலும் புலி, சிங்கம், சிறுத்தை, ஓநாய் முதலியவைகளையும் நேரில் கண்டு அவைகளுடன் சண்டைப் போர்கூட செய்திருக்கிறேன்" இப்படிப் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டே வந்தவர் "ஏழு அறுத்தான் காணி, எட்டிப் பார்த்தால்பள்ளம்" என்னும் சம்பவம் பற்றிக் குறிப்பிட்டார்.

## வெங்காய வெடி

"ஒரு காலத்தில் இந்த மலைப் பிராந்தியத்தில் சுமார் ஐம்பது அல்லது அறுபது பேர்தான் இருந்தோம். அன்று எங்களிடம் இருந்த ஏர் உழும் மாடுகள் மொத்தம் ஏழுஜதைகள்தாம். அந்த ஏழு ஜதை மாடுகளையும் காட்டு விலங்குகளுக்குப் பயந்து ஒரே இடத்தில் கட்டிவிடுவோம். நாங்கள் பல நாய்களை வளர்ப்பதுண்டு. ஏனென்றால் சில சமயங்களில் குள்ளநரிகள் வந்து ஆடுகளைத் தூக்கிக்கொண்டு போய்விடுமாதலால் திருடர்களுக்குப் பயந்து நாய்களை வளர்ப்பது உண்டு. ஓரிரவு எங்களுடைய நாய்கள் விடாமல் குரைத்தன. நரிகளும் ஊளையிட்டன. எழுந்து சென்று பக்கத்துக் குடிசையில் இருப்பவர்களைக் கூப்பிடலாமென்றாலும் ஒரு பர்லாங் தூரம் நடந்துபோக வேண்டும். அதனால் நாய்கள் குரைக்கும் சப்தம் கேட்டும், அவரவர் குடிசைக்குள்ளேயே இருந்துவிட்டோம். ஆனால் யாரும் தூங்கவில்லை. நாங்களும் கையில் பட்டாக் கத்தியுடன் கைவிளக்குகளையெல்லாம் அணைத்துவிட்டுத் துணிவுடன் உட்கார்ந்திருந்தோம். ஏனெனில் காட்டு விலங்குகள் வந்தால்தான் நாய்கள் குரைக்கும். எல்லோரும் வெளியில் பந்தங்களைப் பிடித்துக்கொண்டுபோய், "ஓஹா! ஓஹா!!" என்று கூச்சலிட்டால் விலங்குகள் ஓடிவிடும். நாங்கள் வெங்காய வெடியை உபயோக படுத்துவதுமுண்டு.

ஆனால், அன்று நாய்கள் குரைத்ததுமட்டுமின்றி யாரிடமோ அடியும் வாங்கிக்கொண்டு கூச்சலிட்டன. வந்தவர்கள் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்று புரிந்தது. குடிசைக்கு வந்து நெல், ஆடு, மாடுகளைத் திருடிக்கொண்டு போவது அவர்களது வழக்கம். அதனால், பொதுவாக நாங்கள் நெல்லையும், ஆடு, மாடுகளையும் குடும்பங்கள் இருக்குமிடங்களில் அநேகமாக வைப்பதில்லை. வாழும் குடிசைக்கும், ஆடு மாடுகள் தங்குமிடம், நெல் களஞ்சியம் இவற்றிற்கிடையே குறைந்தது ஒரு கூப்பிடு தூரமாவது இருக்கும்.

மேலும், பெரிய பெரிய பள்ளங்களை அக்காலத்தில் மூடுவதில்லை.

## மந்திரத்துக்கு கட்டுப்படும் மலைப்பாம்பு

இரண்டாவது-இந்த மலைப் பிராந்தியத்தில் அலையும் மலைப்பாம்புகளை அடித்துக் கொல்லாமல் வீட்டின் அருகில் வராதபடி மந்திரத்தால் எல்லைக் கட்டி வைப்போம். ஆனால் எங்கள் குடும்பத்தினர்களுக்கு மட்டும் எல்லைக்கோடு தெரியும். மலைப் பாம்புகள் எங்கே இருக்கின்றன என்றும் தெரியும். குழந்தைகளுக்கும் அவைகளைக் குழந்தைப் பருவம் முதற்கொண்டே பழக்கி விடுவதுண்டு. ஆனால் அன்னியர்களும, கள்ளர்களும் பலர் அந்த பள்ளங்களிலும், மலைப்பாம்பின் வாயிலும் சிக்குண்டு மரணமடைவதை நானே கண்டிருக்கிறேன். ஆகையால் நாங்கள் மலைப் பாம்புகளைக் கொல்வதில்லை. அன்று இரவு நாங்கள் யாரும் வெளியில் வரவே இல்லை. மறுநாள் காலையில் சேவல் கூவும் பொழுது வீர, சூரப்புலிகள் போல் ஒவ்வொருவராக வெளியில் வந்தோம். கண்டது என்ன தெரியுமா? நாங்கள் வயல் வேலைக்காக வைத்திருந்த ஏழு ஜதை மாடுகளையும், பல ஆடுகளையும், பல கோழிகளையும், நெல் மூட்டைகளையும் காணவில்லை. விசனத்துடன் இருந்த நாங்கள் அன்று முழுவதும் வயல்களுக்குப்போகவில்லை. அன்று மாலை, "கண் கரட்டு சாப்பு மலை"யின் மேல் சேவல்கள் கூவும் ஓசையும் கேட்டன. ஆனால் மாலைபொழுதாகிவிட்டதால் அந்த மலைக்குப்போக தைரியமில்லாமல் இருந்தோம்.

## மலைப்பாம்பா? மரமா?

மறுநாள் காலையில் நாங்கள் தடிகளையும், கத்திகளையும் எடுத்துக்கொண்டு அங்கு போய்ப் பார்த்தோம். சில கோழிகள் நாங்கள் போவதற்குள் எங்கள் குடிசைகளைத் தேடிக்கொண்டுவந்து விட்டன. பின் நாங்கள் எல்லோரும மலையின் மேல் ஏறிச் சென்றோம். அங்கே சில ஆடுகள் மட்டும் மரத்தில் கட்டப்பட்டிருந்தன. மற்ற ஆடுகளைக் காணோம். அத்துடன் துர்நாற்றமும் அடித்தது. சுற்றுமுற்றும் பார்த்தபோது ஒரு பெரிய பள்ளத்திலிருந்து நாற்றம் வருவது தெரிந்தது. பள்ளத்தை எட்டிப்பார்த்தபோது ஏழு ஜதை எருதுகளும் ஒன்றோடொன்றாக இணைக்கப்பட்டுப் பள்ளத்தில் இறந்து கிடந்ததைக் கண்டோம். பிறகு பள்ளத்தின் மேலே சுற்றிப் பார்த்தபொழுது சற்று தூரத்தில் இரவு தீ மூட்டிய சில கற்கள் தெரிந்தன. அவற்றின் பக்கத்தில் ஒரு பெரிய மலைப்பாம்பு உடம்பெல்லாம் தீப்புண்களுடன் காணப்பட்டது. இவைகளைக் கண்டதும் அன்றிருந்த ஒரு அனுபவசாலியான பெரியவர், 'நம்முடைய மாடுகளை ஒரே கயிற்றால் இணைத்துக் கட்டிக்கொண்டு வந்திருக்கிறார்கள். வந்தவர்கள் ஆடுகளை மரத்தில் கட்டியிருக்கிறார்கள். கோழிகளை மொத்தமாகக் கூடையில் போட்டிருக்கிறார்கள். கோழிகளைச் சமைப்பதற்காக தீ மூட்டியிருக்கிறார்கள். இப்படி வரும் கள்ளர்களில் சிலர் பாத்திரங்களையும் தூக்கிக்கொண்டு வருவதுண்டு. மலைப் பாம்பை மரம் என்று கருதி அத்துடன் இணைத்து கல்லை வைத்து தீ மூட்டியதும் அது புரண்டு வாலால் அடித்திருக்கிறது. அந்த சமயத்தில் தான் கள்ளர்கள் கத்தியிருக்க வேண்டும். அந்தக் கத்தலைக் கேட்டு மிரண்ட மாடு ஒன்று வெகு அருகிலிருக்கும் பள்ளத்தில் விழுந்திருக்க வேண்டும். மாடுகள் எல்லாம் ஒன்றாக இணைக்கப் பட்டிருந்ததால் எல்லாமே பள்ளத்தில்விழுந்து விட்டிருக்கின்றன.

## திருடர்கள் அச்சம்

மலைப்பாம்பின் தோற்றத்தைக் கண்டும், மாடுகள் விழும் சப்தத்தைக் கேட்டும் அஞ்சிய கள்ளர்கள் அனைவரும் எல்லாவற்றையும் விட்டுவிட்டு ஓடியிருக்கவேண்டும். அப்படி ஓடியதால்தான் சில ஆடுகளும், கோழிகளும் நமக்கு மிஞ்சின. மேலும் அவற்றில் சில கோழிகளையும் ஆடுகளையும் நேற்றிரவு விலங்குகள் கொண்டு போயிருக்கின்றன. ஏனெனில் அவைகளின் காலடிகளும் காணப்பட்டன. அன்று முதல் "ஏழு அறுத்தான் காலி" எட்டிப் பார்த்தால் நாற்றம்" என்று பெயரிட்டிருந்ததை இன்று "ஏழு அறுத்தான் காணி எட்டிப் பார்த்தால் பள்ளம்" என்று சொல்கிறார்கள் மேற்கண்டவாறு கூறி முடித்தார் அப்பெரியவர்.

# நாகை துறைமுக அபிவிருத்தி திட்டம்: மத்திய அரசு மறுப்பு

**புதுடெல்லி, செப். 1—நாகப்பட்டினம் துறைமுக அபிவிருத்தி திட்டமானது 5-வது திட்டத்தில் மத்திய அரசுத்துறை திட்டமாக சேர்த்துக் கொள்ளப்படமாட்டாது. இது சம்பந்தமாக தமிழ்நாடு அரசு தெரிவித்திருந்த கோரிக்கையை ஏற்க மத்திய அரசு மறுத்துவிட்டது.**

மத்திய அரசுத் துறை திட்டங்கள் பொருத்தவரை, 4-வது திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டு, சரிவர நிறைவேற்றப்படாத திட்டங்களுக்கு மட்டுமே 5-வது திட்ட காலத்தில் செலவு அனுமதிக்கப்பட வேண்டும் என்று சமீபத்தில் முடிவு செய்யப்பட்டுள்ளதாக போக்குவரத்து இலாகா அதிகாரி ஒருவர் கூறினார்.

போக்குவரத்து இலாகாவுக்கான எம். பி.க்கள் ஆலோசனைக் கமிட்டி கூட்டம் நேற்று டெல்லியில் நாகை துறைமுக அபிவிருத்தி பிரச்னையை காத்தமுத்து (கம்யூனிஸ்டு) கிளப்பினார். இது பற்றி அந்த இலாகாவின் உதவி மந்திரி பி. முகர்ஜி, நிலைமையை விளக்கினார்.

2 பெரிய துறைமுகங்கள் (சென்னை, தூத்துக்குடி துறைமுகங்கள்) கொண்ட ஒரே மாநிலம் தமிழ்நாடுதான் என்பதை முகர்ஜி சுட்டிக்காட்டினார்.

சிறு துறைமுகம் என்ற முறையில் கடலூர் துறைமுக அபிவிருத்திக்கு மத்திய அரசு செலவு செய்து வருவதாகவும் அவர் தெரிவித்தார்.

ஆகவே தற்போதைய நிலையில் நாகப்பட்டினம் துறைமுக அபிவிருத்தி திட்டத்தை 5 வது திட்டத்தில் மத்திய அரசுத் துறையில் சேர்த்துக் கொள்ள இயலாது என்று அவர் கூறினார்.

## நாளைய நிகழ்ச்சி

கலைவாணர் தினம், தலைமை: கே. ஏ. தங்கவேலு. வரவேற்புரை: எஸ். ருத்ரமூர்த்தி. கலைவாணர் உருவப்படத் திறப்பு: டி. என். அனந்த நாயகி, சிறப்புரை: கே. கமலக் கண்ணன், பி. ஆர். செல்வராஜ், வி. மாணிக்கவாசகம், தேங்காய் சீனிவாசன், ஸ்ரீஷண்முகானந்தா. கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் நடுநிலைப்பள்ளி, மந்தைவெளிப் பாக்கம், மாலை 6 மணி.

# கேரளத்தில் அரிசி ரேஷன் குறைப்பு

திருவனந்தபுரம், செப். 1—கேரள மாநிலத்தில் இன்று முதல் அரிசிப் பங்கீட்டு அளவு பாதியாகக் குறைக்கப்படும.

இப்பொழுது நாளொன்றுக்கு வயதுவந்த ஒருவருக்கு 160 கிராம் அரிசி வீதம கொடுக்கப்படுகிறது. இது 80 கிராமாகக் குறைக்கப்படும.

கேரளத்துக்கு மத்திய அரசு ஒதுக்கும் அரிசியின் அளவு குறைக்கப்பட்டதையடுத்து இந்த நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

என்றாலும் அரிசி ரேஷன் அளவு குறைப்பு கோதுமை சப்ளை மூலம் ஈடு செய்யப்படும்.

# ரூ. 45 கோடிக்கு காப்பி ஏற்றுமதி

புதுடெல்லி, செப். 1—நடப்பு 1974-75ம் ஆண்டில் இந்தியாவிலிருந்து வெளி நாடுகளுக்கு ரூ 48 கோடிக்கு காப்பிக்கொட்டை ஏற்றுமதி செய்யப்படும்.

இத்தகவல் பார்லிமெண்டில் தெரிவிக்கப்பட்டது. பிரதானமாக அமெரிக்கா, ரஷியா, பிரான்ஸ்போலந்து ஆகிய நாடுகளுக்கு காப்பிக் கொட்டை ஏற்றுமதி செய்யப்படும.

# 7 கட்சிக் கூட்டணியில் தி. மு. க. சேராது: கருணாநிதி அறிவிப்பு

**சென்னை, செப். 1—புதிதாக அமைக்கப்பட்டிருக்கும் 7 கட்சிக் கூட்டணியில், தி. மு க. சேராது என்று முதலமைச்சர் கருணாநிதி திட்டவட்டமாக அறிவித்தார்.**

கோவை ஆப்பக்கூடலுக்கு வருகைதந்த கருணாநிதியை நிருபர்கள் சந்தித்தனர். அப்போது கேட்ட கேள்விகளும், கருணாநிதி அளித்த பதில்களும் வருமாறு:—

கேள்வி: மதுவிலக்கு இன்று முதல் அமுலாகிறதே; இனி குடிப்போர் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்படும்?

முதல்வர்: சட்டத்தை மீறுவோர் யாரானாலும் தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

கேள்வி: நடவடிக்கை கடுமையாக இருக்குமா?

முதல்வர்: அது குற்றங்களின் தன்மையைப் பொறுத்தது.

கேள்வி: ராகி, சோளம் ஆகியவற்றை நெல் கொள் முதல் செய்வதுபோல் கொள் முதல் செய்து விற்கலாமே.

முதல்வர்: ராகி, சோளத்தின விலை சென்ற வாரத்தை விட இந்த வாரம் இறங்கி விட்டது. விலை இறங்குமுகத்திலிருப்பதால் கொளமுதல் தேவையில்லை.

கேள்வி: சுதந்திரக் கட்சித் தலைவர் பிலுமோடி புதிதாக உருவாகியுள்ள ஏழுகட்சிக் கூட்டணிக்கு தி. மு. க. ஆதரவு இருக்குமென்றும் நாளாவட்டத்தில் தி. மு கழகமும் இதில் சேருமென்றும் கூறியிருக்கிறாரே அதற்கு தங்கள் பதில் என்ன?

முதல்வர்: தி. மு. கழக அரசு தமிழ்நாட்டு மக்களின் எண்ணங்களுக்கேற்ப அவர்களது முன்னேற்றத்திற்காகவும், அதேநேரத்தில் இந்தியாவில் உள்ள மாநிலங்களின் உரிமைகளுக்காகவும் பாடுபடுகிறது. அது தன்னைக் கரைத்துக்கொண்டு வேறு எந்தக் கூட்டணியிலும் ஐக்கியமாகத் தயாராகவும் இல்லை; அப்படித் தேவையும் இல்லை

கேள்வி; கம்யூனிஸ்டு கட்சியின் சுற்றறிக்கை திருடப்பட்டிருப்பதாக கல்யாணசுந்தரம் கூறியிருக்கிறாரே?

முதல்வர்: சிரிக்கத்தான் தோன்றுகிறது.

மேற்கண்டவாறு கருணாநிதி பேட்டியளித்தார்.

## ஊனமுற்றோர் நிதிக்கு ரூ. 8 லட்சம்

ஈரோட்டில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியில் உடல் ஊனமுற்றோர் நிதிக்காக கருணாநிதியிடம் ரூ. 8 லட்சம் திரட்டப்பட்டது.

கோவை மாவட்டம் ஈரோடு நகரில் இதுவரை தாலூகா அளவில் இருந்த மருத்துவமனை மாவட்ட தலைமை மருத்துவ மனையாக மாற்றப்பட்டுள்ளது. இதற்கான தொடக்கவிழா நேற்று நடந்தது.

விழாவில் முதலமைச்சர் கருணாநிதி கலந்துகொண்டு, அந்த மருத்துவமனைக்கு, "தந்தை பெரியார் கோவை மாவட்ட தலைமை மருத்துவமனை" என்று பெயர் சூட்டினார். மருத்துவமனையில் பெரியார், அண்ணா ஆகியோரது படங்களையும் அவர் திறந்து வைத்தார்.

விழாவில், கோவை மாவட்டத்தின் சார்பில் உடல் ஊனமுற்றோர் நல்வாழ்வு நிதிக்காக திரட்டப்பட்ட ரூ. 8 லட்சம் கருணாநிதியிடம் வழங்கப்பட்டது.

விழாவுக்கு அமைச்சர் சாதிக்பாட்சா தலைமை தாங்கினார்.

கருணாநிதி பேசுகையில் கூறியதாவது;—

"மாவட்ட மருத்துவமனையாக மாற்றப்பட்டுள்ள இந்த மருத்துவமனையின் ஒரு பகுதியானகுழந்தைகள்பிரிவு கட்ட தந்தை பெரியார் ரூ. 1 லட்சம் நன்கொடை கொடுத்திருந்தார். மீதிச் செலவு ரூ 1.85 லட்சத்தை அரசாங்கம் ஏற்றுள்ளது.

### சாதனைகள்

மக்கள் நல்வாழ்வுத் துறைக்காக கடந்த நான்கு ஐந்தாண்டுகளில் ரூ. 43½ கோடி ரூபாய் செலவிடப்பட்டு இருக்கிறது. ஆனால், காங்கிரஸ் ஆட்சி நடத்திய 1967 முடிய 16 கோடி ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருந்தது. இதேபோல ஆங்கிலேயர் ஆட்சி முதல், காங்கிரசார் ஆட்சி நடத்திய 1967 முடிய 535 மருத்துவமனைகள்தான் தொடங்கப்பட்டிருந்தன. கடந்த ஐந்து ஆறு ஆண்டுகளில் மட்டும் 210 புதிய மருத்துவமனைகள் தொடங்கப்பட்டிருக்கின்றன.

1974—75-ம் ஆண்டில் தமிழ்நாட்டில் 45 தாலூகா மருத்துவமனைகளும், 5 மாவட்ட தலைமை மருத்துவமனைகளும் 42 ஆரம்ப சுகாதார நிலையங்களும் அமைக்கப்படும்.

இவ்வாறு கருணாநிதி கூறினார்.

மக்கள் நல்வாழ்வுத் துறை இயக்குனர் பாலகிருஷ்ணன் ஆரம்பத்தில் வரவேற்றுப் பேசினார்.

திராவிடர் கழகத் தலைவர் மணியம்மையும் விழாவில் கலந்துகொண்டார்.

## இன்றைய சினிமா

**சென்னை**
ராம் — ஆப்கி கஸம்
நியூ எல்பின்ஸ்டன் — 'யாமினி'
நேஷனல் — பாபு
ஈராஸ் — கல்யாணமாம் கல்யாணம்

**தாம்பரம்**
நேஷனல் — உங்கள் விருப்பம்
எம். ஆர். தியேட்டர் — சஞ்சீர்
ஸ்ரீசித்ரா — சம்பூர்ண ராமாயணம்

**வில்லிவாக்கம்**
ராயல் — தங்கப்பதக்கம்

**குரோம்பேட்டை**
வெற்றி — ராஜநாகம்

## தமிழக அமெச்சூர் நாடக சங்கம்: நிர்வாகிகள் தேர்வு

சென்னை, செப் 1—தமிழக அமெச்சூர் நாடக நடிகர் சங்க நிர்வாகிகள் தேர்வு நடைபெற்றது.

சென்னை கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சௌந்தர்ய மகாலில் நடைபெற்ற தேர்தலில் தலைவராக அரியலூர் ஏ. நெடுமாறன் துணைத் தலைவராக ஆர். நாடகமணி பொதுச் செயலாளராக தஞ்சை செல்வம், துணைச் செயலாளராக கலைவாணி ஆர். கண்ணன் பொருளாளராக ஆ. மணிமாறன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# அடுப்பங்கரை சுயாட்சி: மாப்பிள்ளை கோரிக்கை

"தனக்கு அடுப்பங்கரை சுயாட்சி வேண்டும்" என்று புதுமாப்பிள்ளை ஒருவர் கேட்டார்.

தனது திருமண விழாவிலேயே, அந்த மாப்பிள்ளை இந்தக் கோரிக்கையை வலியுறுத்தியதாக, அந்த மாப்பிள்ளையின் ஒரு டாக்டர் நண்பர் வெளியிட்டார்.

இந்தச்சுவையான சம்பவம் பற்றிய விவரம் வருமாறு:—

தஞ்சை மாவட்டம் பட்டுக்கோட்டையைச் சேர்ந்த பஸ் அதிபர் கே. டி. வி. சண்முகம் செட்டியாரின் மகள் கஸ்தூரிக்கும், டாக்டர் நடராஜனுக்கும் தஞ்சை வ. உ. சி. நகர் ரெத்தின காலனியில் கடந்த மாதம் 29-ந் தேதி திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

இந்தத் திருமணத்திற்கு ஏராளமான பேர் நேரில் வந்து வாழ்த்துத் தெரிவித்தனர். அவர்களில் கந்தர்வக் கோட்டையைச் சேர்ந்த டாக்டர் எம். ஏ. வி. ராஜேந்திரனும் ஒருவர். அவர் மாப்பிள்ளையின் நண்பர்.

டாக்டர் ராஜேந்திரன் அந்தத் திருமண விழாவில் புதுமையான முறையில் 'திருமண வாழ்த்து'ப் படித்துக் கொடுத்தார்.

அதைக் கேட்டவர்கள் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்கள். அந்தத் திருமண வாழ்த்தில், கூறப்பட்டுள்ள வாசகங்கள் வருமாறு:—

### கணவராகப் பதவி ஏற்பு

"ஆல் இன்டியா ரேடியோ. திருமணச் செய்திகள். வாசிப்பது ராஜேந்திரன். இன்று காலை டாக்டர் நடராஜ் ரெத்தின காலனியில் கணவராக பதவி ஏற்றுக் கொண்டார்.

முன்னதாக தனது திருமண அறிக்கையை வெளியிட்ட மாப்பிள்ளை ஸ்ரீ நடராஜ் சமையல் மற்றும் மாவரைக்கும் வேலைகளில், தமது மனைவியை அனுமதிக்கும் உத்தேசம் இல்லையென்றும், தாமே அவற்றை மேற்கொள்ள திட்டமிட்டு இருப்பதாகவும், தெரிவித்தார்.

தமது தம்பிகளுடன் பூர்வாங்க ஆலோசனை, ஒன்று நடத்திய பின்னரே மசாலா அரைப்பது பற்றிய முடிவை வெளியிட இயலும் என்றும் மாப்பிள்ளை ஸ்ரீநடராஜ்குறிப்பிட்டார்.

காலை மணமேடைக்கு மாப்பிள்ளை ஸ்ரீ நடராஜனை அழைத்து வரும்போது மேளம் அடிப்பதை பார்த்த ஸ்ரீ நடராஜ், "நான்தான் மேளம் அடிப்பேன்" என அடம்பிடித்ததன் காரணமாக இரண்டு விநாடிகள் தாமதமாயிற்று.

### நள்ளிரவில் திடீர் தாக்குதல்

கடந்த நள்ளிரவு சுமார் 2 மணி அளவில் சமையற்கட்டினுள்புகுந்த மாப்பிள்ளை ஸ்ரீ நடராஜின் திடீர் தாக்குதலுக்குள்ளாகி, ஏராளமான இட்லிகள் சேதமடைந்தன.

லேசான சிராய்ப்புகளுடன் சில இட்டிலிகள் தப்பித்தன. மாப்பிள்ளையின் மடியிலுள்ள பத்திற்கும் மேற்பட்ட இட்லிகள் நிலை கவலைக்கிடமாக இருப்பதாக சற்று முன்வந்த செய்தி ஒன்று கூறுகிறது.

மேற்படி சம்பவத்தைத் தொடர்ந்து தக்க பந்தோபஸ்து ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளதாகவும், பதட்ட நிலை நீங்க, மாமூலாக வேலைகள் நடப்பதாகவும் ஸ்தல உயர்மட்ட அதிகாரி ஸ்ரீஜானகி தெரிவித்தார்.

பட்டுக்கோட்டை மாமியார் வீட்டில் நிர்மாணிக்கப்பட்டுள்ள நவீன ரக சமையல் கூடத்தை மாப்பிள்ளை ஸ்ரீநடராஜன் நாளை திறந்துவைத்து உப்புமா கிண்ட இருப்பதாக நமது நிருபர் தெரிவித்தார்.

நீங்கள் கேட்டுக்கொண்டிருப்பது திருமணச் செய்திகள்.

### அடுப்பங்கரை சுயாட்சி

உப்புமா கிண்ட தாம் மறுத்ததாக கூறப்படும் செய்தி உண்மைக்கு புறம்பானது என்றும், "அடுப்பங்கரை சுயாட்சி" பெற்ற பின்னரே தாம் அதுபற்றி பரிசீலிக்கக் கூடுமென்றும் மாப்பிள்ளை ஸ்ரீ நடராஜ் மாவு அரைக்கையில் கூறினார்.

ஆரோக்யமாகவும், திடகாத்திரமாகவும் இருக்க தம்மைப் போல, புரதச் சத்துக்களும் வைட்டமின்களும் நிறைந்த சாம்பாரை அதிக அளவு குடிக்க வேண்டுமென்று மாப்பிள்ளை ஸ்ரீ நடராஜ் தமது தம்பிகளை கேட்டுக்கொண்டார்.

1975 அக்டோபர் நவம்பர் வாக்கில் மாப்பிள்ளை ஸ்ரீ நடராஜ் 'அப்பா' ஆகிவிடுவாரென திட்டவட்டமாக நம்பப்படுகிறது.

இத்துடன் திருமணச் செய்திகள் முடிந்தது. அடுத்த ஒலிபரப்பு 'நடராஜ்—கஸ்தூரி' பொன்விழா அன்று ஒலிபரப்பாகும்.

மேற்கண்டவாறு அந்த திருமண வாழ்த்தில் கூறப்பட்டுள்ளது.

# சென்னை நகரில் மது அரக்கன் கொடும்பாவி

**சென்னை, செப். 1—நேற்று நள்ளிரவுடன் மதுக்கடைகள் மூடப்பட்டதைக் கொண்டாடும் வகையில் சென்னையில் நேற்று மது அரக்கன் கொடும்பாவிகள் கொளுத்தப்பட்டன.**

சிந்தாதிரிப்பேட்டை. மயிலாப்பூர், தியாகராய நகர், வடபழனி முதலிய இடங்களில் பழைய காங்கிரஸ்காரர்கள் மது அரக்கன் கொடும்பாவி கொளுத்தினர்.

குடிபோதை விளைவாக நிகழ்ந்த மோதல்கள், தாக்குதல்களில் காயமடைந்த பலர் நேற்றிரவு ராயப்பேட்டை அரசினர் மருத்துவமனைக்கு வந்தவண்ணமிருந்தனர்.

ரத்தகாயங்களுடன் பெரும் எண்ணிக்கையில் வந்த நபர்களை சமாளிப்பது மருத்துவமனையில் அலுவல் பொறுப்பிலிருந்தபெண்டாக்டர்களுக்கு சங்கடமாயிருந்தது. காயமடைந்தவர்களில் பலர் குடிசைவாழ் மக்களாவர்.

நகரில் தீவிர போலீஸ் ரோந்து நீடித்தது. சாலைகளில் கிடந்த பலரை போலீசார் எழுப்பி வீட்டுக்கு அனுப்பினர்.

அசம்பாவிதம் எதுவும் நிகழவில்லை என்றும். யாரும் கைது செய்யப்படவில்லை என்றும் உயர் போலீஸ் அதிகாரி ஒருவர் கூறினார்.

## விளம்பர நிறுவனத்தின் புதிய நிர்வாகி

சென்னை, செப். 1—சென்னையில் கிராண்ட் அட்வர்டைசிங் (இந்தியா) லிமிடெட் என்ற விளம்பர நிறுவனத்தின் ரெசிடெண்ட் டைரக்டராக ஆ. வி. ராஜன் நியமிக்கப்பட்டுள்ளார்.

இதுவரை டெல்லியில் இந்திய விளம்பர ஆலோசகர்கள் நிறுவனத்தின் ஜெனரல் மானேஜராக அவர் பணியாற்றி வந்தார்.

# விஷம் கலந்த உப்பு சாப்பிட்டு 3 பேர் சாவு

ஹைதராபாத், செப். 1—விஷம் கலந்த உப்பு அடங்கியிருந்த உணவை உட்கொண்டதால், 3 பேர் இறந்தனர். இந்த சம்பவம் நேற்று ஹைதராபாத் நகரில் நடந்தது.

அவர்கள் உட்கொண்ட உணவைச் சோதித்துப் பார்த்ததில். உணவில் கலந்திருந்த உப்பில் விஷம் இருந்ததாக கூறப்படுகிறது.

இறந்தவர்களின் வீட்டை போலீசார் சோதனையிட்டு, உப்பு டப்பா ஒன்றை கைப்பற்றினர்கள்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No 4, South Bank Road, Madras-600028, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Chief Editor: S. V. G. Sowrirajulu.

Honorary Editor: N. Muthukumarasami.